பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

இஃது

# தமீமுல் அன்சாரி அவர்களின்

# கிஸ்ஸா.

இதனை

அறபு, பாரிசு, உருது பாஷைகளிலிருந்து

ஆயர்பேட்டை

வாலை பாவா ஸாஹிப குமாரர்

அப்துல்காதிறு ஸாஹிபு அவர்களால்

தமிழில் மொழிபெயர்த்து அச்சிட்டிருந்த

அசல் பிரதிக்கிணங்க

சென்னை, திருவல்லிக்கேணி,

ஹாஜி M. A. ஷாஹுல் ஹமீது & ஸன்ஸ்,

அவர்களால்

தங்களது

ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திர சாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

சுத்தப்பதிப்பு.

1948

[அணா 8.

பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

இஃது

# தமீமுல் அன்சாரி அவர்களின்

# கிஸ்ஸா



இதனை

அறபு, பாரிசு, உருது பாஷைகளிலிருந்து

ஆமூர்பேட்டை

வாலை பாவா ஸாஹிபு குமாரர்

அப்துல்காதிறு ஸாஹிபு அவர்களால்

தமிழில் மொழிபெயர்த்து அச்சிட்டிருந்த

அசல் பிரதிக்கிணங்க



சென்னை, திருவல்லிக்கேணி,

ஹாஜி M. A. ஷாஹுல் ஹமீது & ஸன்ஸ்,

அவர்களால்

தங்களது

ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திர சாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

சுத்தப்பதிப்பு.

1948

இதன் விலை] [அணா 8.



பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

இஃது

# தமீமுல் அன்சாரி அவர்களின்

# கிஸ்ஸா.



அல்ஹம்துலில்லாஹி றப்பில் ஆலமீன் வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலாஸய்யிதினா முஹம்மதின் வஆலிஹி, வஅஸ்ஹாபிஹி அஜ்மயீன். "அம்மாபஅது" இக்கிதாபாகிறது, தமீமுல் அன்சாரி றலியல்லாஹு அன்ஹுவினுடைய விசளங்களைப் பேசிவருகிறதாகயிருக்கும். இஃது முன்னால் அறபி, பாரீஸ், உர்தூ இவைகளிற் செய்யப்பட்டிருந்தது. அதனை பேட்டை ஆமூரிலிருக்கும் வாலை பாவா சாஹிபு குமாரராகிய அப்துல்காதிர் சாஹிபு யாவருக்கும் தெரியும்படி தமிழ்மொழியாக விளங்கச்செய்தனர்.

---

## 1-வது கிஸ்ஸா.

### தேவானது தமீமுல்அன்சாரி றலியல்லாஹு அன்ஹுவைத் தூக்கிக்கொண்டுபோன விபரம்.

ஹக்ஸுபுஹானஹு வதஆலாவினுடைய தூதராகிய முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் குர்ஆனினுடைய ஹுக்குமின்படி பூமியெங்கும் தீனானது ஓங்கி நாளுக்கு நாள் வளர்ந்தேறி வரும்படியாக மதீனத்திலிருந்து அரசாண்டு வருகிறநாளையில் ஒரு நாள் நாலுயார்களும் மற்றுமுண்டான முஹாஜரீன்கள் அன்சாரீன்களுமாகிய அஸ்ஹாபுமார்களுமாக ஓரிடத்திற்சேர்ந்து சர்வரே ஆலம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நானாவிதமாகிய நஸீஹத்துகளும் ஹக்தஆலாவின கட்டளைகளையும் பேசிக்கொண்டிருந்தார்கள். அந்தக்கூட்டத்தில் தமீமுல் அன்சாரியென்னும் அஸ்ஹாபுமிருந்தார், அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் சகல அஸ்ஹாபுமார்களையும்பார்த்து ஓ அஸ்ஹாபுகளே! யெனக்குப் பின்னிட்டு தமீமுல் அன்சாரியினபேரில் ஒரு பெரிதாகிய ஆபத்துவந்து நேரிடும், அதெப்படிக்கொற்றவையெனில், அதிக புதுமையுள்ள காரணங்களாகவிருக்குமென்று திருவுளமானார்கள். பின்னும் அஸ்ஹாபுமார்களைப்பார்த்து ஓ என் அஸ்ஹாபுமார்களே! நீங்கள் எல்லாரும் மிகுந்த பயபக்தியோடு

நடந்துகொள்ளும்படியாக உங்களுடைய காதுகளைகொடுத்துக் கேட்டு எச்சரிக்கையோடு நடநதுவாருங்கள். அதேனெனில், யாதொருவர் தங்கள் தங்கள் பெண்ஜாதிமாருடன் கூடினால் உடனே தாமதஞ்செய்யாமல் முழுகிக்கொள்ளவேண்டியது. அது ஏனெனில், எதுவரைக்கு முழுகிக்கொள்ளாதிருக்கிறானோ அது வரையில் அவன்பேரில் பலாமுஸீபத்துகள் வந்துபிடிக்குமென்று சொல்லிப் பின்பு தமீமுல் அன்சாரியைப்பார்த்து நீர் எப் பொழுதும் இந்த காரியத்தின்பேரில் மெத்தசாக்கிரதையா யிருக்க வேண்டியதென்று கட்டளையிட்டார்கள். அன்று முதலாகத் தமீமுல்அன்சாரி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமிட்ட கட்டளையின்பேரில் மறதியில்லாமல் எந்நேரமும் அதே நினைவாக விருந்தார். அப்படிச் சிலநாள் கழிந்துவிட்டது, அப்படி நடந்து வருகிற நாளையில் ஒருநாள தமீமுல் அன்சாரி தன் பெண்ஜாதியைப் பார்த்து வெனனீா சுடவையென்று சொல்லிவிட்டு தாண இஸ்திஞ்சாவிற்காக வெளியேவந்து உறக்கததோடிருக்கையில் இருந்தாப்போலிருந்து ஒரு தேவானதுவந்து தமீமுல் அன்சாரி யைத் தூக்கிக்கொண்டு போய்விட்டது.

அப்போது பெண்ஜாதி வெந்நீர் காயவைத்து தன்புருஷனை முழுக்காட்ட வேணுமென்று வந்து பார்க்கையில் வீட்டினுள் புருஷனில்லை, அப்போது அப்பெண் மணவாளனைக் காணோமே யென்று நகமுகமும் ஓடிச்சுற்றிப்பார்க்கையில் அகப்படவில்லை. அதனால் அப்பெண் அதிக வருத்தமெடுத்து சிலசீமைகளிலும் சென்று தேடிஅலைந்து அவ்விடங்களிலுங் காணமல் அதிகமன வருத்தத்தோடு முத்துபோல் கண்ணீரைவிட்டு அழுதழுது மெத்த வியாகூலமாய் ஏழுவருஷம் வரைக்கும் விசனமே போஜனமாக்கிக் கொண்டு தன்புருஷன் காணாதமாயத்தை நினைத்து நினைத்து மெழுகுவுருகுவதுபோல உடலின் சதைகளெல்லாங்கரைய துக்க சமுத்திரத்தில் மூழ்கியிருந்தனர். அந்நாளில் சர்வரே ஆலம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் வபாத்தாய் பின்பு அபூபக்கர் சித்தீகு றலியல்லாஹு அன்ஹுவினுடைய கலீபாப் பட்டமும்சென்று அவர்களும் மவுத்தாய் பின்பு உமறு றலியல் லாஹு அன்ஹுவினுடைய கிலாபத்தினுடைய பட்டத்தின்நாளா யிருந்தது, அப்போது தமீமுல் அன்சாரியினுடைய மனையாள் ஏழுவருஷம் வரைக்கும் தேடியும் அகப்படாமையாலும் உண்ண உடுத்த இல்லாத வருத்தத்தினாலும் மிகுந்தவிசனங்கள்பட்டு இனி மேல் நாம் சும்மாயிருக்க லாகாதென்றெண்ணி ஹஜரத்துஉமறுறலி யல்லாஹு அன்ஹுவின் கிட்டேபோய் ஓ றசூலுல்லாவினுடைய கலீபாவே! என்புருஷன் எங்கேயோபோய் ஏழுவருஷமாய்விட் டது. அவர் எங்கே போய்விட்டாரோ? இதுவரைக்கும் அவரை

நான் தேடினேன். அவரின்னவிடம்போனாரென்றுந் தெரியவில்லை. அல்லது அவர் உயிரோடிருப்பதும் அல்லது மவுத்தாய் விட்டதும் அல்லது இன்னவூரில் இன்னவிடத்தில் இருக்கிறாரென்கிற சேதியு மொன்றுங்காணேன். ஆகையாலெனக்கு ஜீவனத்தனுடைய வருத்தம் பெரிதாயிருக்கின்றது, அதற்காகவேண்டி நான நிக்காஹு செய்துக்கொள்ள உத்திரவு தரவேணுமென்று கேட்க, அதற்கு உமறு றலியல்லாஹு அன்ஹு உத்திரவு கொடுத்தார்கள்.

அப்போது அப்பெண்பிள்ளையை பனீகுலத்திலுள்ள ஒரு அஸ்ஹாபு நிக்காஹு செய்துகொண்டார். ஆனாலிங்கு அறிவாளிகள்சொல்லுகிறார்கள். அல்லாஹு சுபுஹானஹுவதஆலா மெத்த குதறத்துள்ளவன் அவன் அறியாததும், அவனுடைய இல்மிலடங்காததும் யாதொன்றுமில்லை. பாருங்கள் என்னென்ன வேடிக்கைகள்செய்துகாண்பிக்கிறான். அவனுடைய குதறத்து அவனுக்கே லாயக்காயிருக்கும், நிக்காஹ்முடிந்த இரவு பெண்ஜாதியும் புருஷனும் வீட்டிற்குள்ளிருந்தார்கள் அவ்வேளையில் அப்பெண்ணிற்கு இஸ்தஞ்ஸாவினுடையநாட்டமாய் சிறுநீர்ச்செய்ய வீட்டைவிட்டு வெளியிலே வந்தனர், அப்போது அல்லாஹு சுபுஹானஹுவத ஆலா தமீமுல் அன்ஸாரியையும் அன்றயிரவே அவர் வீடுகொண்டு வந்து சேர்த்தான். அப்போது தமீமுல் அன்ஸாரி றலியல்லாஹு அன்ஹு சடைகளை வளர்த்துக்கொண்டு கன்னங்கறேலென்று வாசலில் நிற்கக்கண்டு அப்பெண் காபராப்பட்டு மிகுந்த கலக்கமாய் முன்னால் நம்மள புருஷனைக்கொண்டு போன தேம்வா, அல்லது ஜின்னோ! அல்லது பூதமோவென்று ஒன்றுந்தெரியாமல் கிடுகலங்கி தப்பிப்போன தன் புருஷனோவென்று மெத்தவும் நிதானிக்கையில் அடையாளமொன்றுந் தெரியாமல் யாரோவென றெண்ணி தன் புருஷனைக்கூப்பிட்டுச் சொல்ல அவர் வெளியே வந்து பார்க்கையில், ஒருவர் நிற்கக்கண்டு நீயார், என் வீட்டிற்கு இந்நேரத்தில் எவ்விதம் வரலாமென்று கேட்டார். அதை தமீமுல அன்ஸாரி றலியல்லாஹு அன்ஹு கேட்டு “ஹாஹா” நீயார் வேற்று மனிதன் என்னுடைய வீட்டிற்குவந்து முறைமையில்லாமல் என்னை நீயாரென்று அதிகாரஞ்செய்ய வந்தாயா? என் வீட்டைவிட்டு சீக்கிரமாய் வெளியே போய்விடு, இப்பெண் என்னுடைய பெண்ஜாதி. இப்பிள்ளை என்னுடைய பிள்ளையாயிருக்கும். ஆகையால் நீ என் வீட்டைவிட்டு உன்னுடைய வீட்டிற்கு போய்விடென்று சொன்னார். இப்படியே இரண்டுபேரும் இராமுழுதும் என் பெண்ஜாதி உன்பெண்ஜாதி என் வீடு உன் வீடென்று சச்சரவுபட்டுக்கொண்டிருந்தார்கள். பொழுதும் விடிந்துபோயிற்று. அப்போது ஊரார்களெல்லாங்கூடி இவ்விரண்டுபேரையும் உமறுகத்தாபு றலியல்லாஹு அன்ஹு விடம் கொண்டுபோய்விட்டு இவர்கள் சச்

சரவுபடுவதையுஞ் சொன்னார்கள், அதை உமறுகத்தாபு றலியல் லாஹு அன்ஹு கேட்டு வெகு நேரமட்டும் ஆலோசனைசெய்து ஒன்றும் யோசனை பிரியாமல் மன விசனத்தோடு இதற்குத் தீர்ப் புக்கொடுக்க என்னால் முடியாது. ஆகையால் நாம் எல்லோரும் அலிறலியல்லாஹு அன்ஹு விடத்திற்குப்போய்ச்சொல்வோம், அவர் எப்படிப்போற்கொத்தவரெனில் அறிவின்கடல், ஆலோசனை யிலும் பெரியவர், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமுடைய மருமகர் வல்லமையுள்ளவர், பெரிய கோத்திரத்தார், தீனுக்கொரு தூணானவர், அவர் இதற்குத் தீர்ப்புக்கொடுப்பாரென்று சொல்லி உமறுகத்தாபு றலியல்லாஹு அன்ஹுவுடன் சகலபேருங்கூடி இவ்விரண்டுபேரையுங் கூட்டிக்கொண்டு போனார்கள்.

---

## 2-வது கிஸ்ஸா.

அலிறலியல்லாஹு அன்ஹு தமீமுல் அன்சாரி றலியல்லாஹு அன்ஹுவின் துன்பங்களையும்,

அவர்கள்பட்ட கஷ்டங்களையும், வினவிய விபரம்

இந்தக்கிஸ்ஸாவானது அதிக·ருசிகாமுள்ளதாகவிருக்கின்றது, இதைக் கேட்பவர்களுடைய கல்பெல்லாம் சந்தோஷிக்கும், சில ருக்கு வருத்தமுறும், அப்போது அலிறலியல்லாஹு அன்ஹு தமீ முல் அன்சாரி றலியல்லாஹு அன்ஹுவினுடைய முகத்தைப் பார்த்து உமக்குண்டாகிய காரியங்கள் முழுமையும்சொல்லுமென்று கேட்க, அப்போது தமீமுல் அன்சாரி, அலிறலியல்லாஹு அன் ஹுவினுடைய முகத்தைப்பார்த்து றசூலுல்லாவினுடைய மருகரே ஹக்தஆலாவின் புலியே! இல்மின் புதைப்பொருளே இரகசியத்தை வெளியாக்கும்வேதக்கடலே இந்த அடியேன் பட்டதெல்லாஞ்சோல் லுகிறேன் கேட்டருளவேணுமென்று சொல்லத்தொடங்கினார்கள். (யா அலியே) நானபட்டமுந்தின வருத்தமானது என்னை அந்தத் தேவும் தூக்கிக்கொண்டுபோய் குல்சமென்னும் கடலின்புறமாகச் சேர்த்து அக்கடற்குள் மூழ்த்தி உள்பூமிக்கும் கீழ்கடலில் என் னையும் முழுகவைத்து உள்ளேகொண்டு போகும்போது நான்பார்த் தேன், அவ்விடத்திலுள்ள இருட்டை எனகண்ணுற்கண்டேன், அவ்விருட்டினுடைய கொடுமையைச்சொல்ல எனனால்முடியாது. அங்கே தங்கவும் இருக்கவும் இடமுமில்லைஎல்லையுங் கரையுமில்லை, அந்தபுறமாக என்னை அந்தக் காபிறாகிய தேவுகள் கொண்டுபோ யினது, அதனாலெனக்கு இனிமேல் நாம் பிழைக்கப்போகிறதில்லை யென்று நம்பிக்கைவிட்டேன். பின்பு அந்தத் தேவானது தன்னு டையகாலின் நகத்தினால்பிடித்து கவ்வியெடுத்துப் போவதினால்

சொல்லமுடியாத வருத்தம் வந்துநேரிட்டது. அப்படி அனேக நாள் வரைக்கும் அந்த இருட்டினில் கொண்டுபோனது. அதனுலு மெனக்கு எள்ளளவு சந்தோஷமும் பிறக்கவில்லை. அப்போதுஹக்தஆலாவினுடைய கிருபையினுலே வெகுநாளுக்குப்பின் என் கண்ணிற்கு வெளிச்சத்தைக்காண்பித்தான், நான் அந்த வெளிச்சத்தைக் கண்டு அநேகநாள் அந்த வெளிச்சத்துள் கொண்டு போனது, அப்படிப்போகையில் என் கண்முன் தோப்பொன்று எதிர்ப்பட்டது, அந்தத் தோப்பானது அந்தத்தேவுடைய பட்டணம், அதனுள் என்னைக்கொண்டுபோய்க் கீழேயிறக்கிவிட்டது. அப்போது நான் அந்தத் தோப்பினுள் நகமுகமும் அலைந்துதிரிந்து பார்த்தேன், அங்கே என்னைப்போல மனிதர்வடிவான ஒரு ஜனத்தையும் என்னைத் தவிர காணவில்லை. இன்னும் அத்தோப்பு எப்படிப்பட்டதெனில், விதவிதமாகிய கனிவர்க்கங்களும், விதவிதமான வர்ணப்பழங்களும், வித விதமான ருசிகளுமுள்ளது. இன்னும் அங்கு ஆறுகுளங்களுமுண்டு, அதிலிருந்து எழும்பித் தண்ணீரோடிக் கொண்டிருக்கிறது, இன்னும் விசித்திரமாகிய மரங்களும் அம்மரங்களில் ஒளிவுகள் தங்கி ஒரே வெளிச்சமாய் இலங்கிக் கொண்டிருக்கிறது. இன்னும் அந்தச் சோலையிலுள்ள மண்களெல்லாம் சர்க்கரையும் மணல்களெல்லாம் கற்கண்டு மாயிருக்கிறது. இன்னும் அவ்விடத்திலுள்ள புதுமைகளையும் குதறத்துகளையுமிவ்வளவென்று சொல்ல என்னுல் முடியாது. நான் அந்தத் தோப்பினுள் நகமுகமும் அலைந்துத் திரிந்து எனக்குப் பசியாகும் வேளையில் அதிலுள்ள கனிகளைப் பறித்துத்தின்று என் பசியை யாற்றிக்கொள்வேன். இன்னும் என்னைச்சுற்றி எத்தனையோ தேவுகள் எனக்குக் காவலாக இருந்ததுகள், இப்படி நடந்துவருகிற நாளையில் ஒருநாள் எனக்கு மனவருத்தத்தினுலே நடந்துகொண்டேயிருந்தேன். அங்கே ஒரு இடம் அகப்பட்டது. அவ்விடம் எப்படிப்பட்டதெனில், பசுமையாகத் தழைத்துப் பூத்துக் காய்த்துக் கனிகளும் சிதறக்கிடக்கவும் குளிர்ந்த காற்றும் கமகமவென்று மணமுமாயிருந்தது. அதை நான் கண்டு மிகுந்த சந்தோஷத்துடன் இது இளைப்பாற நல்லவிடமென்றெண்ணி என் மனத் துக்கத்தினுல் அங்கோர் மரத்தடியில் படுத்து நித்திரையாய்விட்டேன். அப்போது ஒரு மனிதன் வந்து என்னைத் தட்டி எழுப்பினுன். நான் கண்ணை முழித்து அவனைப்பார்த்து, ஓ என் உடப்பிறந்தானே! உன்னை யார் இந்தப் தோப்பினுள் கொண்டு வந்து விட்டது? நீ எங்கிருந்து வந்தாய்? இந்தச் சோலை எந்தத் தேசத்திற்குச் சேர்ந்தது, இது எவ்விடத்திலிருப்பது என்று கேட்டேன். அதற்கவன் என்னைப்பார்த்து இத்தோப்பானது பூமிக்குள் கீழிருக்கின்றது, இங்கே மனிதர்களின் நடமாட்டம் யாதொன்றுமில்லை, இதற்கும் மனிதருக்கும் பூமிக்கும் ஆயிரத்தியிருநூறு

வருஷத்துத் தூலைதூரமுண்டென்று சொன்னான், அதை நான் கேட்டு நிரம்ப துக்கத்துடன் அழுதேன். இனிமேல் நாம் போகவு முடியாது அப்படி தொலைக்குப் போகவும் நமக்கு வயதுமில்லையே யென்று மிகுந்த ஆபாசங்கொண்டு ஒரு மரத்தடியில் உட்கார்ந்துக் கொண்டிருந்தேன். அப்படிப்பட்ட வேளையில் இருந்தாப்போலி ருந்து லக்ஷக்கணக்கானப்பரிக் கூட்டங்கள் சண்டையினுடைய ஆயுதங்களைப் பூட்டிக்கொண்டு வெகுஆங்காரத்தோடு பெரியகூட்ட மாக வந்து தோப்பினுள் இறங்கினார்கள். அவர்களைக் கண்டு நான் நிரம்பவும் பயந்து விட்டேன். அப்போது அந்தப் பரிகூட்டங்கள் தோப்பினுள் அதிககொடூரமாகத் தோப்பை அழித்தார்கள். அப் போது தேவுக்கூட்டங்களெல்லாங்கண்டு இந்தஇரண்டு படைக்கும் சண்டைவந்து நேரிட்டது. (யா அலியே) பரிக்கூட்டத்திற்கும் தேவுக் கூட்டத்திற்கும் நடந்த சண்டையோ நான் சொல்ல என் னுடைய நாவே வரவில்லை. இந்த இரண்டு கூட்டமும் ஒன்றோ டொன்று எதிர்த்துச் சண்டைசெய்து அந்தத் தோப்பினுள் இரத்த ஆறுஓடிபோய்விட்டது. எத்தனையோ ஆயிரம்தேவுகள் அறு பட்டு போயின, அப்போது தேவுகள் தோற்றுப்போயின. பரியின் படைகள் வெற்றிபெற்று அப்பட்டணத்தைப் பிடித்துக்கொண்டு கட்டிசிம்மாதனத்தில் இருக்கச்செய்துவிட்டன. (யாஅலியே)அப் போது பரிகளுக்கெல்லாம் பாதுஷாவாகிய பரி என்னை மிகுந்த பிரி யத்துடனே அழைத்து சிம்மாதனத்தின்பேரில் கிட்டேஉட்கார்த் திக்கொண்டு மதுரமாகிய நானுவித மொழிகளெல்லாம் பகர்ந்து ஒருவாரத்திற்குள்ளாகத் தங்களுடைய பட்டணம்போய்ச் சேர்ந்து விடுவீர்களென்று சொன்னதாகச்சொன்னார்கள். அந்தச்சொல்லை அலிறலியல்லாஹு அன்ஹு கேட்டு ஓ தமீமுல் அன்சாரியே! நீ ரிப்பொழுது சொல்லிவந்ததெல்லாம் மெய்யே, இதிலொரு பொய்யுமில்லை, இங்கே எங்களுக்கு அங்கே நடந்தவைகளெல்லாம் தெரியும், அதெப்படியெனில், வெள்ளிக்கிழமை ஜும்ஆ கொத் துபாவிற்கு ஒரு நாழிகைக்குமுன் ஜமாதிஸ்ஸானிமாதம் பத்தாந் தேதியன்று சண்டை நடந்தது, அந்தப் பரியின்பேர் ஈஸாவென் றுசொல்ல அதற்குத் தமீமுல் அன்சாரி றலியல்லாஹு (யா அலியே) தாங்கள் சொன்னதில் ஒருஎள்ளளவும் சந்தேகமில்லை யென்று சொன்னார்.

---

## 3-வது கிஸ்ஸா

### தமீமுல் அன்சாரி றலியல்லாஹு அன்ஹுவிடம் பரிகளின் பிள்ளைகளை ஓதவைத்தும் தாங்கள் அவ்விடம்விட்டு நீங்கியதுமான விபரம்.

இக்கிஸ்ஸாவானது முன்சொல்லிய கிஸ்ஸாவுக்கும் அதிகமானதாகவிருக்கும், கேட்கக்கேட்க இன்பந்தரும், இதை நன்றாய்க் காது கொடுத்துக் கேளுங்கள். (யாஅலியே என்னை அந்தப்பரி அதிக மரியாதையுடன் ஒருவாரத்திற்குள்ளே தன்னுடைய பட்டணங்கொண்டு போய் தன் வீட்டினுள் எனக்கு மிகுந்த சங்கை செய்து அதிக வணக்கத்துடனே என்னைப்பார்த்து உன்பெயரும், உன் தேசத்தின் பெயரும் உன்குலத்தின் பெயரும் எனக்குத் தெரியும்படியாகச் சொல்லென்று கேட்டது. அப்போது நான் இஸ்லாமானவன் என்னுடைய பட்டணம் மதீனம், என்குலம் அறபு, இன்னும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமுடைய அசுஹாபிமார்களில் நானொரு அஸ்ஹாபி, என்பெயர் தமீமுல் அன்சாரி யென்று சொன்னேன். அப்போதுஅந்தப் பரி என்னைப்பார்த்து என் காலில்வந்து வீழ்ந்து காலைமுத்தியிட்டு கண்ணையும் வாயையும் அடிக்கடி முத்திபிட்டு இப்போது றசூல்ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மிருக்கிறார்களாவென்று கேட்டது, அதற்கு நான் சர்வரே ஆலம் வபத்தாய் விட்டார்களென்று சொன்னேன். அந்தசொல்லைக் கேட்டவுடனே அந்தப்பரியானது சொல்லமுடியாத அழுகையோடு துக்கப்பட்டது, பின்பு என்னைப்பார்த்து என்பிள்ளைக்கு நீர் "குர்ஆனெமஜீது" கற்றுக்கொடுக்கவேண்டுமென்று கெஞ்சிக்கேட்டது அப்பொழுது நான் அப்படியே ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டேன். அப்பொழுது எண்ணிக்கையில்லாத பரிகளின் பிள்ளைகளுக்கெல்லாம் ஓதிக்கொடுத்துக் கொண்டிருந்தேன், அதனால் பரிகளெல்லாம் என்பேரில் மிகுந்த கிருபையாய் என்னைக் கண்ணில் ஒத்திக்கொண்டுஉண்க, தின்க கொடுத்துவந்தார்கள். அப்படியிருக்கையில் ஒருநாள் ஓதுகிற சிறுபெண்களெல்லாம் நான் முன்னாலிருந்ததேவுடைய தோப்பின் சங்கதியையும் அங்கு நடந்த சண்டையின் சங்கதிகளையும் கேட்டார்கள். அதற்கு நான் அங்கு நடந்த சங்கதிகளையெல்லாம் சொன்னேன், அதுகளை அப்பெண்கள் கேட்டு என் முன்னாகக் கிலுகிலுவென்று மெத்தச் சிரிப்புகள் சிரித்து சண்டையான பூமி வேறுபூமியாயிருக்கும், மனிதரிருக்கும் மேல்தட்டுபூமி அல்ல இங்கிருந்து அத்தோப்பிற்கு 1500-வருஷத்தின் வழிப்பயணமுண்டு, இந்தப்பூமி பரிகளிருக்கிற இடமாயிருக்குமென்று சொன்னார்கள். அதுகேட்டு நான் நிரம்பவும் அழுதேன்.

(யா அலியே) அப்பொழுது நான் 1500-வருஷம் பிழைக்கப் போகிறேமா! அவ்வளவுநாளின் நீண்டவயதும் நமக்குண்டா வென்று மிகுந்த சஞ்சலத்தினலே பெண்சாதி பிள்ளை வீடு வாசலின் நினைவுகளொழிந்து நம்பிக்கையற்றவனுய்ப் பின்னும் அப்பிள்ளைகளுக்கு ஓதிக்கொடுத்துக்கொண்டிருந்தேன். அப்படி நடந்துவருகிறகாலையில் "ஹஜ்ஜு" பெருநாள் வந்தது, அன்றைய தினம் பரியின்குலப் பெண்களெல்லாம் உயர்ந்த உயர்ந்த விலை மதிக்க ஒண்ணுத ஆடையாபரணங்களைத் தரித்துக்கொண்டு மிகுந்த அலங்காரத்துடன் என்முன் வந்தார்கள், நானவர்களைப் பார்த்து அன்றிரவு என் வீடு வாசல்களையும் நினைத்துப் படுத்தேன், அப்போது கனவில் அவர்களைக்கண்டு முழித்துப் பார்க்கையில் அவர்களைக் காணுததால் என்னிலுமடங்காத துக்கம்பொங்கி என்னையுந் தெரியாமல் நிரம்பவுமழுதேன் அதைப் பாதுஷாவாகிய பரி கேள்விப்பட்டு உடனே என்னை அழைத்து கிட்டே உட்கார வைத்துக்கொண்டு இன்று இது பெரிய நாளாயிருக்க நீ சந்தோஷப் படாமல் அதிகத் துக்கத்தோடு அழவேண்டிய காரணமென்ன வென்று கேட்டது. அப்பொழுது நான் என் பெண்சாதி பிள்ளைகளையும் வீடு வாசல்களையும் நினைத்து அழுதேனென்று சொன்னேன். அதை அந்தப் பரியானது கேட்டு மிகுந்த இரக்கத்தோடு என் பேரில் கிருபையால் எனக்குத் தைரியம் வரும்படியாக வேண்டிய உபசார வார்த்தைகளெல்லாம் சொல்லினது, இன்னும் என்னைக்கட்டி அணைத்து மாரோடு சேர்த்துக்கொண்டது, இன்னும் நீ ஒன்றுக்கு மஞ்சாதே உன்னை உன்தேசங் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி செய்கிறேனென்றது, பின்பு தன்னுடைய சிம்மாதனத்தை விட்டுக் கீழே யிறங்கி என்கையைத் தன்கையாற் பிடித்துக் கூடவே யழைத்துக்கொண்டுபோனது. (யா அலியே) இனி கேளுங்கள் என்னுடைய துக்கமான பேச்சுகளைக்கேட்டு அந்தப் பரியானது என்னை அழைத்துக்கொண்டு குகையினுள்ளே புகுந்தது. அந்தகுகை யெப்படிப்பட்டதெனில் போகப்போக அதிக இருட்டாகவே யிருந்தது. இப்படிபோகையில் வெளிச்சத்தைக் கண்டோம் அங்கே ஓருகாடும் எதிர்ப்பட்டது. அந்தக்காட்டில் சிலநாள்வரைக்கும் நடந்தோம். அப்போது ஒருதோப்பு எதிர்ப்பட்டது. அதன்கிட்டே போய்பார்க்கும்பொழுது அதன்வாசற்படிமூடிப் பூட்டியிருந்தது. அப்பொழுது நாங்களிரண்டுபேரும் பூட்டைத்திறந்து உள்ளே நுழைந்து போனேம். எங்களுக்கு முன்னுலே விலைமதிக்க ஒண்ணுத பொன்னுல் கட்டப்பட்ட ஒருமெத்தை ஒன்று இருந்தது. அதற்கும் பூட்டிட்டிருந்தது. அதையும் பரியானது திறந்து என்னையுங்கூட அழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தது. அங்கே எத்தனை தேவுகளுக்கு கால்விலங்கு கைவிலங்கு போட்டு சிறையிலடைக்கப்பட்டிருந்தது. அந்தத்தேவுகளெல்லாம் இந்தப்பரியைக் கண்டு

மாத்திரத்தில் கைகால்களெல்லாம் கிடுகிடுவென்று அதிர நடுக் கலெடுத்து வாய்குழறி நடுங்கினதுகள். அதுகளையும் தாண்டி அப் புறம் போனேனும். (யா அலியே) அங்கேகண்ட அதிசயமென்ன வென்றால் :—

தேவுகளுக்கெல்லாம் வலுப்பமான ஒரு பெரிய தேவிற்கும் கால்விலங்கு கைவிலங்கு போட்டிருந்தது. அதன் படைப்பு எப்படி யிருந்ததெனில் தலை மலைபோலவும் இரண்டு கண்களும் கொல்லன் உலைமுகத்தில் எறியும் வண்டிருளை போலவும் மூக்குகள் மதகுகள் போலவும் காதுகள் விரிந்தபாய் போலவும் வயிறு யானையைப் போலவும் பனைமரம் போலே நீண்ட கைகளும் ஒரு முழ நிகள மான நகங்களும் சைவலம் போல நீண்ட ரோமங்களும் இரத்த வாடையுள்ள நாற்றமும் உதடுமாரில் தொங்கவும் மேலுதடு மூக்கை மறைக்கவும் பல்லுகள் வாச்சியைப் போலவும் நானுவிதமாகிய கோலமாகவிருந்தது. அந்தத் தேவானது இந்த இராஜபரியைக் கண்ட உடனே உடலெல்லாம் ஒரே நடுக்கங்கொண்டு வாய் குழறி வாய்நீர் வரண்டு அதிக மரியாதை செய்தது. அப்போது அந்தப் பரியானது அந்தக் கொடிய தேவைப்பார்த்து ஓ மூதேவியான தேவே! இப்பொழுது என் சொல்படி கேட்டு நீ நடப்பாயாகில் உன்னை விலங்கை விட்டு விடுதலை செய்வேனென்று சொல்ல அச் சொல்லை தேவு கேட்டு என்னரசனே! நானொன்றுந் தவிராமல் என்னுயிரைக் கொண்டும் என் உடலைக் கொண்டுஞ்செய்து முடிப பேனென்று மிகுந்த வணக்கமோடு சொல்லியது. அதை அப்பரி கேட்டு நல்லது இதோ என் கூடவருகிறவர் என்மகளுடைய குருவு இவரை நீ மிகுந்த பயத்தோடு பத்திரமாக இவருடைய பட்டணம் மதீனம் அங்குக்கொண்டுபோய் உயிர்ச்சேதமொன்றும் வராதபடி கொண்டுபோய் விட்டுவிட்டு வருவாயாகில் உன்னைச் சிறையை விட்டும் விடுதலை செய்வேனென்று சொல்ல அதற்குத் தேவானது நான் தங்களுடைய அடியன் தாங்கள் சொல்லியபடியே அவரு டைய வீட்டிலிவரைச் சேர்த்து விடுவேனென்று சொல்லினது அப்பொழுது இராஜபரி எனக்கு ஒரு "துஆ" வைக் கற்றுக் கொடுத்து உனக்கு எந்த ஆபத்துகள் வந்து நேரிட்டபோதிலும் ஓனறு முடியாதென்று சொல்லி எனனை அந்தத் தேவுடைய தோள்மேலேற்றி அனுப்பி வைத்துவிட்டு தன் பட்டணம் போய் விட்டது.

(யா அலியே) தேவானது என்னைத் தோளிலேற்றிக்கொண்டு காற்றைப்போல் பறந்துபோனது அப்படிக் கொஞ்சதூரங்கொண்டு போய் சமுத்திரத்தி லெனனைப்போட்டு எத்தனையோ தரம் முழுக வித்தது. பின்னும் என்னைத் தூக்கிக்கொண்டு வானத்தின் புற

மாகப் பறந்து என்னைக் கீழேபோட்டுக் கொல்லவேணுமென்று நாடினது. அதனாலும் நான் விழவில்லை. அப்போது அந்தக் கொடிய தேவானது நானாவிதமாகிய தந்திரங்களெல்லாஞ் செய்து என்னைக் கொல்ல நாடினது. ஆனால் நான் ஓதுகிற இஸ்மினுடைய பறக்கத்தினால் அத்தேவுடைய கெடுதலையெல்லாம் என்னை ஒன்றும் செய்யவில்லை. அதனுடைய வல்லமையு மொன்றும் பலிக்கவில்லை. அதனால் அந்தத் தேவுக்கு அதிக கோபமுண்டாகித் தன்னுடைய தலையை மலைகளில் மோதிக்கொள்ளும், என்னை அடிக்கடி தன் பல்லால் கடிக்கும், இப்படி அனேக விதமான வருத்தங்கள் செய்தும் ஒன்றும் முடியாமல் கடைசியில் என்னைத் தூக்கிக்கொண்டு வானத்தின் புறமாகப் பறந்துபோனது. அங்கே மலக்குகள் ஹக்தஆலாவினுடைய திக்கிறும் தஸ்பீஹுஞ் செய்துக் கொண்டிருந்தார்கள். அந்த சத்தங்களையும் நான் என்காதில் கேட்டேன். அப்பொழுது அந்த மூதேவி தேவானது அதிக வல்லமை செய்து வானத்தினகிட்டே முடுக உன்னிப்பறந்தது, அப்போது அந்த மலக்குகளில் ஒருமலக்கு நெருப்பினால் படையுண்ட தடியொன்றுகையிற் பிடித்து வந்து அந்த மூம்தவியான தேவையடித்தார், அந்த அடியினவருத்தம் பொறுககாமல் பாவியான தேவு மனமெறிந்து என்னைச் சாகும்படி கீழேயெறிந்து விட்டது. அப்போது ஹக்தஆலா என்னை உயிரோடிருக்கும்ப்டிக்கு காப்பாற்றினான் நானொரு கொடியதாகிய காட்டிற்போய்ச் சேர்ந்தேன், அந்தக் காடானது சொல்லமுடியாத இருண்டவனமா யிருந்தது, அந்த வனததினுள் சிலநாள் வரைக்கும சொல்லமுடியாத வருத்தங்களையெடுத்துத் திரிந்தேன், அப்படித் திரிந்தலைந்துவருகையில் எனக்குச் சொலலமுடியாத வியாகூலம்வந்து நேரிட்டது. இனிநம்முடைய வீடெங்கேயிருக்கின்றது நாமெங்கேயிருக்கிறோம் எப்பொழுது வீடுபோய்ச் சேர்வோம் நாம் போய்ச்சேர அவ்வளவு நாளுயிரோடிருப்போமோவென்று கலங்கி நடந்துவருகிற வழியில் அஙகோர்பறவை யானையைபோல் பெருப்பமுள்ளது எதிர்பபட்டது. அந்தப் பறவைக்கு இரண்டுபுறமும சிறகுகளிலருநது அந்த இரண்டு சிறகும் நானாவிதமான வாணமாயிருந்தது, அநதப் பறவை எனமுன் வந்துநினறு ஓதமீமுல் அனசாரியே! இனிமேல் நீ யொன்றுக்கும் பயப்படவேண்டாம் சஞ்சலமெல்லாம் நீங்கிவிடும், உம்முடையபட்டணமும் வீடும் கிட்டே யிருக்கிறது. நீர் சந்தோஷத்தை எடுத்துக் கொள்ளுமென்று சொன்னது. அந்தச் சந்தோஷமான வார்த்தையை நான் கேட்டு, இதென்ன புதுமையான பறவையாயிருக்கிறது. மனிதர் பேசுவனப் போல்பேசுகின்றதே! இந்தக்குதறத்தை அல்லா அறிவானெனறு என் மனதிலெண்ணி ஆசசரியப்பட்டேன், பின்பு நான் மிகுந்த அச்சததோடு அப்பறவையைப்பார்த்து நீ பறவையாயிருந்து மனிதர் பேசுவதுபோல பேசுகிறாயே யென்று

கேட்டேன், அதற்கு அப்பறவையானது நான் உன்னுடன் பேசும் படியாக அல்லாஹுத்தஆலா எனக்கு நாவைக் கொடுத்தானென்று சொல்லினது பின்னும் நான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமுடையபறவை யாதொரு இஸ்லாமானவர்வழிதப்பிமயங்கும் வேளையில் நான் அவர்களை வழியிற்கொண்டுபோய்ச் சேர்ப்பதற்காக இருக்கிறேன். இன்னுமவர்களுக்கு உதவியும் ஒத்தாசையும் உண்க, தின்னக்கொடுக்க செய்கிறவழக்கமென்று சொல்லி உடனே என்னை பசியாறும்படியாகச்செய்து என்பசியை ஆற்றி மிகுந்த மரியாதை செய்தது. அப்பொழுது நான் அப்பறவையைப்பார்த்து நான் எந்த வழியாக போகிறதென்று கேட்டேன், அதற்கு அப்பறவை நீ மேற்கு புறமாகப் போவென்று சொன்னது.

---

## 4-வது கிஸ்ஸா.

### தாப்பத்துல் அறலெனும் பறவையைக்கண்டு பேசினவிபரம்.

இந்தக்கிஸ்ஸாவானது மிகுந்த இன்பம் பொருந்தியது. இதைகேட்ககேட்க விநோதமானது. நன்றாய்க் காதுகொடுத்து கேளுங்கள், (யாஆலியே) அந்தப்பறவையின் சொல்லின்படியே மேற்க்குபுறமாக ஒருகாட்டின் வழியாக நடந்துபோனேன். அங்கே எனனெதிரில் ஒரு மிருகமானது தோன்றினது. அதை நான் உற்றுப்பார்த்தேன். அப்பொழுது எனக்கு எபபடிப்பட்ட பயம் வந்ததெனில், இனிமேல் நாம் பிழைக்கப் போகிறதில்லையென்று நம்பிக்கை யற்றுவிட்டேன். அந்த மிருகத்திற்குத் தலையுமில்லை, காலுமில்லை, சிறகுமில்லை முகமுமில்லை, வயிறுமில்லை பறக்கிறதுமில்லை இப்படிப்பட்ட உருவுள்ளதாகவும் பேசுவதாகவுமிருந்தது அது உருண்டுருண்டு என்புறமாக வந்தது அதைக்கண்டு நான கலக்கமாகினேன, அது எனகிட்டே வந்து ஓதமீமுல் அன்சாரியே! நீரொன்றுக்கு மஞ்சவேண்டாம். அல்லாஹுத்தஆலா பெரிய குதறத்துள்ளவன், அவன நானுவிதமாகிய படைப்புகளைப் படைக்க வல்லவன். நீரேன் ஆச்சரியப்படுகிறீர், நான் அவனுடைய படைப்புகளில் நின்றும் நானொரு படைப்பாயிருப்பே னென்றது. அதன் சொல்லைக்கேட்டு என்னுடைய உணர்வு என்னை விட்டு விலகி செத்த பிணம்போலாயினேனென்றுசொன்னார்கள். அதை அலிறலியல்லாஹு அன்ஹு கேட்டு ஓதமீமுல் அனசாரியே! நீரதன பெயரைக் கேட்டீராவென று கேட்க, அதற்குத் தமீமுல் அன்சாரி றலியல்லாஹு அன்ஹு நான். அந்த மிருகத்தினுடைய பெயரைக் கேட்கவில்லையென்று சொன்னாகள். அபபோது அலிறலியல்லாஹு அன்ஹு ஓ தமீமுல் அனசாரியே! நீர்கண்ட மிருகத்தின் பெயரானது "தாபபத்துல் அறலு" அது கியாமதநாளில்

அந்த மைதானில்வந்து மூமின்கள் இன்னாரென்றும் முனாபிகு கள் இன்னாரென்றும் பிரித்து நரகத்திற்குக் கொண்டுபோகு மென்று சொல்ல அதைக்கேட்டு தமீமுல் அன்சாரி றலியல்லாஹு அன்ஹு (யாஅலியே) தாங்கள் சொல்லினது நிஜமே. பின்பு நான் அந்த மிருகத்தைப்பார்த்து எப்படிப்போகிறதென்று கேட்டான். அதற்கு அந்த மிருகம் நீ கிபுலாவின் புறமாகப் போவென்று சொல்லியது.

---

## 5-வது கிஸ்ஸா.

### தமீமுல் அன்சாரி றலியல்லாஹு அன்ஹு தஜ்ஜாலைக்கண்டு பேசிய விபரம்.

ஒ மூமினானோர்களே! இது மிகுந்த ருசிகாமுள்ள அற்புத மான கிஸ்ஸாவானதால் நன்றாக இதைக் காதுகொடுத்து கேளுங்கள் அப்போது தமீமுல் அன்சாரி றலியல்லாஹு அன்ஹு அலிறலி யல்லாஹு அன்ஹுவைப்பார்த்து (யாஅலியே) நான் அந்த மிரு கத்தின் சொற்படி மேற்குப்புறமாக அதிக விசனத்தோடு வருத்த மெடுத்து நடந்தேன் அப்படி நடந்துபோகிற வழியிலொரு கொடு மையாகிய பலாமுஸீபத்தைக்கண்டேன். அது எப்படியெனில் வருத்தத்தினால் சிலநாள் வரைக்கும் நடந்தேன் அங்கோர் வன மொன்று எதிர்ப்பட்டது அந்த வனத்தினுள் ஒரு பெரிய மா மொன்றிருந்தது, அந்த மரத்தின் கிட்டே போனேன் அந்த மரத் தின் பேரில் ஒருமனிதனைக்கண்டேன. அவன் என்னைப்பார்த்து மிரட்டினான். அதனால் நான் அம்மரத்தைவிட்டுந் தூரவிலகி ஓடிப் போனேன் (யாஅலியே) நான் ஓடாமல் கிட்டே போவேனாகிலவன் என்னை உயிரோடுவிடான். நான் தூரமாக ஓடிநின்று அந்த மரத்தில வனை உற்றுப்பார்த்தேன். அவனை நெருப்பின் சங்கிலியைக் கொண்டு உரமாகக் கட்டியிருக்கக்கண்டேன், அப்போதவன் என்னைப்பார்த்து நீ யெங்கிருந்து வந்தாயென்று கேட்டான். அப்போழுது நான் அவனுக்கு என்னுடைய சங்கதிகளெல்லாம் சொன்னேன். அவன் என் மொழிகளெல்லாங் கேட்டுக்கொண்டு என்னைப்பார்த்து இப்பொழுது துனியாவில் ஹறாம செய்கிறார் களா? காஜிகள் லஞ்சம் வாங்குகிறார்களா? பிள்ளைகள் விளை யாட்டுகளை கைக்கொண்டு விளையாடுகிறார்களா? ஹாக்கிம்கள் நீதம் சரியாய்ச் செலுத்துகிறார்களா? எளியோர்கள்பேரில் அனி யாயங்கள் நடக்கிறதா? சாராயம் கள்ளு பங்கியும் குடிக்கிறார் களா? கோட்சொல்லை கேட்டு அதன்படி நடக்கிறார்களா? ஆண் பெண் சொல்லின்படி நடக்கிறார்களா? குர்ஆன் ஹதீதுக்கு மாறுபாடாகச்செய்து நடக்கிறார்களா? பெண்ணின்நடைபடிபோல்

நடக்கிறார்களா? வெட்கத்தை நீக்கிவிட்டார்களா? பெண்கள் புருஷனமார்களை அடிமையாக்கிக் கொண்டார்களா? அண்ணன் தம்பி என்று முறைகொண்டு ஓரிடத்தில் தூங்குகிறார்களா? அசல்பெண் வேற்றானுடன் சிரித்து விளையாடிக் கொண்டிருக்கிறார்களா? அவர்கள் ஒன்றுக்கொன்று கலந்திருக்கிறார்களா? கச்சை நீக்கிக் கொங்கையைக் காண்பிக்கிறார்களா? தூஷணம் பேசுகிறார்களா? இசுலாமானவர்கள் பணத்தின்பேரில் அதிக விருப்பமாயிருக்கிறார்களா? மீசையைவைத்து தாடியை சிரைக்கிறார்களா? பொருமையானவர்கள் வருத்தத்தை யெடுத்துக்கொண்டார்களா? பொய்யும் புறமும் அதிகமாகப் பேசுகிறார்களா? பகைவர்களைவெல்ல யோசனை செய்கிறார்களா? ஒருவரை ஒருவர் பார்த்து எரிச்சல் படுகிறார்களா? தன்னை நிருவாணியாகக் காண்பிக்கிறார்களா? மருமகள் பேரில் மாமியார் பொல்லாங்குச் சொல்லுகிறார்களா? மருமகனோடு மாமியார் புணர்ச்சி செய்கிறார்களா? பரிசுத்தமுள்ளவர்கள் சுத்தத்தனத்தை நீக்கினார்களா? சிறு பெண் பிள்ளைகள் பிள்ளை பெறுகிறார்களா? பெண்ஜாதியும் புருஷனும் சச்சரவுப்பட்டு அவள் வீட்டை விட்டு வெளியேவர வெளி மனிதர்கள் அவளுக்கு ஒப்புச் சொல்லுகிறார்களா? மருமகள் மாமியாரோடும் நாத்தினாரோடும் சச்சரவு செய்கிறார்களா? புருஷனைப் பெண்ஜாதிகள் அடிக்கிறார்களா? இப்படிப்பட்ட வேலைகளிப்போது உலகத்தில் நடந்துகொண்டு வருகிறதா? இல்லையா? வென்று கேட்க, அப்போது நான் கொஞ்சம் கொஞ்சம் நடந்து வருகிறதென்று சொன்னேன். அதை அவன் கேட்ட மாத்திரத்தில் கோடையிடிபோல் ஒரு சப்தமிட்டுக் கட்டியிருந்த சங்கிலிகளெல்லாம் அறுந்துவிழும்படியாக மரத்தை அசைத்தான். நான் இம்மரத்தில் கட்டுப்பட்டிருப்பேன். என்னுடைய வாய்தாவின் படி நாளும் வந்து விட்டதென்று ஆங்காரங்கொண்டு அதிகத் துரிதப் பட்டான். அதனால் எனக்கு எப்படிப்பட்ட பயம் உண்டாயிற்றெனில் என்னுயிர் போகுமளவும் வாராததில் மூடிக்கொண்டது, அந்நேரவேளையில் வானத்தின் புறமாயிருந்து ஒருமலக்கு வந்தார். அவர்முகம் பதினாலாம்பக்கத்து நிலவுபோல் அழகு இலங்கிக்கொண்டிருந்தது. இன்னும் கையில் நெருப்பினால் படையுண்டதடி யொன்றிருந்தது அம்மலக்கு வந்து அவனை பிடித்துப் பின்னும் உறமாகப்பிடித்து சங்கிலியினால் அம்மரத்தின் மேல் கட்டிப்போட்டு அத்தடியாலோங்கி ஓரடி அடித்துவிட்டு என்னைப் பார்த்து நீயவனுக்கு ஏனிப்படிச் சொன்னாய் இவன் தஜ்ஜால் இசுலாமானவர்களுக்கிடையில் பித்தனைக் கலக்கங்களைப் போடப்பட்டவன், இன்னும் துன்யாவில் இவன் கேட்டதெல்லாம் நடக்கவில்லை. குர்ஆன் ஹதீதின் ஹுக்கும்கள் பாக்கியாயிருக்கிறதென்று சொல்லிப் போயினர்.

---

## 6-வது கிஸ்ஸா.

### தமீமுல் அன்சாரி றலியல்லாஹூ அன்ஹூ மலைமேல் ஒருவரைக்கண்டு பேசிமீண்ட விபரம்.

ஓ அறிவுள்ளோர்களே! இது மிகுந்த விநோதத இன்பமுள்ள கிஸ்ஸாவாயிருக்கும் இதைக் கேட்கக் கேட்க மிகுந்த இன்பமும்ருசியுமுண்டாகும், பொல்லாங்குகளை நீக்கும்படிசெய்யும், தீமைகளை விலகி ஷைத்தானை தூரமாக்கி நல்ல வேலைகளை கைக்கொள்ளும்படிச் செய்யும், ஆகையால் காதுகொடுத்துக் கேளுங்கள். (யாஅலியே) நான் அந்தக் கொடிய தஜ்ஜாலைவிட்டு நீங்கிய பின்பு என் தலைமேல் வந்து முடிந்த முஸீபத்துகள் யாதெனில், நான் மிகுந்த சஞ்சலத்தை உடுப்பாக உடுத்திக்கொண்டு நடக்கும வழியில், கால்கள் கொப்பளித்து அசந்து அதிக இளைப்பாகி ஒருமரத்தடியில் படுத்து நித்திரைசெய்து விழித்துக்கொண்டு அப்பொழுது ஹக்தஆலாவினிடத்தில் ஓ நாயனே! நான் இப்படிப்பட்ட வருத்தங்கள் படுவதைப் பார்க்கிலும் என்னை மவுத்தாக்கிவிடு, இல்லாவிடில் பாம்பு தேள்கள் கடித்துக் கொன்றுபோட்டாலும் என்னை நாய், நரி, புலி முதலியவைகள் வந்து பிடுங்கித் தின்றுவிட்டாலும் அதனால் என்னுடைய முஸீபத்து நீக்கிவிடுமென்று துஆக்கேட்டு அவ்விடம் விட்டுப் பின்னுமெழுந்து முன்னோக்கி நடந்துபோனேன். அப்படி வெகுதொலை போனபின் பின்பு என் கண் முன்னாக ஒரு பெரிய மலை யெதிர்ப்பட்டது. அதன் கிட்டே பெரிய சமுத்திரமொன்று இருந்தது, அம்மலையினிடமாக பருந்து, பறவை முதலிய ஒரு ஜந்துக்களுஞ் சஞ்சரிக்கவில்லை. அப்பொழுது நான் அந்த மலையின்மே லேறிப்பாயங்கு நகமுகமும் பார்த்து வந்தேன். அங்கோரிடத்தில் ஒருவித மனிதன் சக்கிரவடிவாக ஒரு வலியுல்லாவைப்போல இபாதத்துச் செய்துக்கொண்டிருக்கக்கண்டு நான் நேராக அவர் முன்பிற்சென்று அதிக வணக்கத்துடன் சலாஞ்செய்தேன். அப்பொழுதவர் தலையைத்தூக்கி என் முகத்தைப் பார்த்து மதுரமான மொழியாக தன் வாயைத் திறந்து நீ யெங்கிருந்து வருகிறுயென்று கேட்டார். அப்பொழுது நான் தாங்கள் யார்? இவ்விடத்திலேயே குடியாயிருக்கிறீர்களாவென்று அதிக மரியாதையோடு கேட்டேன். அதற்கவர் ஆம் நான் இவ்விடமேயிருந்து சீவனஞ் செய்துவருகிறேன். நீ இந்த மலையின் அந்தப்பக்கம் ஓரமாகப் போய்ப் பாரென்று சொன்னார்.

அப்படியே நான் போய்ப் பார்க்கையில் அங்கோர் தோப்பொன்றிருந்தது. அத்தோப்பா செழித்துப் பூத்துக் காய்த்து பழுத்துச் சொரிந்தன. இன்னும் தண்ணீர் குளங்களும் பொங்கி எழும்பி யிருந்தன. இன்னும் எண்ணிக்கையின்றி விதவிதமான

பழங்களும் பழுத்திருந்தன. அதனுள் புகுந்து வேண்டுமான கனிகளையெல்லாம் அறுத்துத் தின்றேன். அக் கனிகளின் ருசியினால் எண்ணங்கள் மாறி அதிகச் சந்தோஷமானேன். அங்கு சிலநேரம் இளைப்பாறி நகமுகமும் தோப்பைச் சுற்றிப் பார்த்தேன். அங்கு ஒரு அழகான மரமொன்றிருந்தது. அம் மரத்தடியில் சற்றுநேரம் உட்கார்ந்திருந்து அம் மரத்தடியைவிட்டெழுந்து அவரிடத்திற்கு வந்தேன். அந்த மனிதன் என்னைப் பார்த்து நீ ஹக்தஆலாவின் குதறத்துகளைக் கண்டாயா? வென்று கேட்டார். அதற்கு நான் அவனுடைய குதறத்தையும் றஹ்மத்தையுங் கண்டேனென்று சொன்னேன். அதற்கவர் நான் இந்தக் கனிகளைச் சாப்பிட்டுக்கொண்டு ஷுக்கூறோடு ஹக்தஆலாவினுடைய இபாதத்து செய்துக்கொண்டிருக்கிறேனென்று சொன்னார். அப்பொழுது நான் பின்னுமவரைப் பார்த்து தங்களுக்கு உடுப்புகளெங்கேயிருந்து வருகிறதென்று கேட்டேன். அதற்கவர் மாதமொருதரம் இங்கே ஒரு தீவிலிருந்து இசுலாமானவர்கள் கப்பல் வருகிறது. அவர்கள் கப்பலை இங்கே கொண்டுவந்து நிறுத்தி லங்கர்செய்து வஸ்திரங்கள் கொண்டுவந்து எனக்குக் கொடுக்கிறார்கள், அதை நான் வாங்கித் தைத்து உடுத்திக்கொண்டு அவர் பேரால் ஹக்தஆலாவினிடத்தில் துஆச்செய்வேன், அவர்கள் ஹக்தஆலாவின் கிருபையினால் சலாமத்துப் பெற்று வருகிறார்களென்று சொன்னார். அச்சொல்லை நான் கேட்டு அவரிடமாகவேயிருந்துவிட்டேன். அப்படி நடந்து வருகிறநாளில் அவர் சொல்படியே கப்பல் வந்தது, அவர்கள் லங்கர் செய்து கப்பலைவிட்டு இறங்கி இந்தப் பெரியவர் கிட்டே வந்து வஸ்திரங்களைக் கொண்டுவந்து முன்னே வைத்தார்கள், அதுகளை அவர் எடுத்துக்கொண்டு துஆச்செய்தார், அப்பொழுது அவர்கள் என்னைப்பார்த்து இம் மனிதன் யாரென்று கேட்டார்கள். அப்பொழுதவர் இம் மனிதன் திசைதப்பி வந்தவர், இவரை நீங்கள் உங்கள் கப்பலிலே கொண்டுபோய் காந்தப்பூமியிலிறக்கி விடுங்களென்று சொன்னார். அந்தச் சொல்லை அவர்கள் கேட்டு அதிகச் சந்தோஷத்துடன் என்னைக்கூட அழைத்துக்கொண்டு போய்க் கப்பலின் மேலேற்றினார்கள்.

பின்பு, லங்கரை எடுத்துக் கப்பலின்மேற்போட்டு பாய் தூக்கிக் கப்பலை ஓட்டினார்கள். கடலில் கப்பல் ஓடினது. (யாஅலியே) அப்பொழுது என்னுடைய அதிஷ்டப்பாக்கியத்தைக் கொஞ்சம் சொல்லுகிறேன், கேளுங்கள், அதிக ஓட்டமாகக் கடலில் கப்பலோடிக் கொண்டிருக்கும் சமயத்தில் ஒரு பெரிய சுழல்காற்று ஒன்று உண்டாயினது, அந்தக்காற்றினால் அந்நேரவேளையில் அவர்களுடைய வல்லமைகளொன்றும் நடக்கவில்லை. அப்பொழுது கப்பல் நீர் கடலில்போய் விழுந்துவிட்டது, அப்பொழுது எல்லாரும் அதிக

விசனமெடுத்துக் கூக்குரலிட்டு அழுதார்கள். ஆனல் அந்த வேளை முடிவு வேளையான படியினலே ஒருவருடைய யோசனையும் நடக்க வில்லை. அந்தக்கடலில் ஒரு மலை ஒன்றிருந்தது. அது பகுதிமலை தண்ணீருள்ளும் பகுதிமலை வெளியேயுந் தெரிந்துகொண்டிருந்தது. அங்கோரவேளையில் ஒரு காற்று வந்து கப்பலை மலையில்கொண்டு மோதிவிட்டது, அதனல் கப்பலுடைந்து சகல ஜனங்களும் தண்ணீரில் மூழ்கி யிறந்துபோனர்கள், எனக்கு மாத்திரம் ஒருபலகை அகப்பட்டது. அப்பலகையின்மேல் நான் ஏறிக்கொண்டு 40-நாள் வரைக்கு மிருந்தேன். (யாஅலியே) அல்லாசுபுஹானஹூவத் தஆலா என்னை எப்படிக்காப்பாற்றின னெனில் இபுறுஹீம் அலைஹிஸ்ஸலாத்தை நமுறாது நெருப்பில் போட்டானே அப்பொழுது வேக ஒட்டாமல் அந்நெருப்பை தோப்பாக்கி விட்டானே யதுபோலும் இன்னும் யூசுபு அலைஹிஸ்ஸலாத்தை அண்ணன் மார்கள் கூடி கிணற்றில் போட்டுவிட்டார்கள். அவரைக் கிணற்றி னுள் காப்பாற்றினனே யதுபோலும், இன்னும் யூனுசு அலைஹிஸ்ஸலாத்தை மீன் விழுங்கிவிட்டது, அவரை மீன் வயிற்றில் பிழைப்பா யிருக்க காப்பாற்றினனே யதுபோலும், இன்னும் னூஹு அலைஹிஸ்ஸலாத்தை பெருவெள்ளத்தில் கப்பல் கவிழ்ந்து போகாமல் ஸலாமத்துப் பெரும்படியாகக் காப்பாற்றினனே யதுபோலும், இன்னும் மூஸா அலைஹிஸ்ஸலாத்தை பிறவூனைக் கொண்டும் ஆற்றைக்கொண்டும் காப்பாற்றினனே யதுபோலும், இன்னும் சத்தாதை சமுத்திரத்தில் பிறக்கவைத்துக் காப்பாற்றி னனே யதுபோலும் மகா வல்லமையும் றஹ்மத்துமுள்ள ஹக்குசுபு ஹானஹூவத் தஆலா என்னையும் கடலில் யாதொரு சேதமும் வராதபடி காப்பாற்றினன்.

---

## 7-வது கிஸ்ஸா.

### மாணிக்கம் மரகதம் முதலியவைகளைக் கண்டெடுத்த விபரம்.

இப்பொழுது சொல்லுகிற கிஸ்ஸாவானது முத்து மாணிக் கங்களை மழைபெய்யுமாகில் எப்படி வாரி மடியிற் கொள்ளு வார்களோ அப்படிபட்டதாக இருக்கும். இதைக்கேட்கப்பட்ட வர்களுக்கு பெரிய இன்பத்தைக்கொடுக்கும், (யாஅலியே) இன்னுங் கேளுங்கள் சகலவற்றையும் படைத்தாளுகிற றஹ்மானுடைய குதறத்தானது எப்படிபட்டதாக இருக்கின்றது, அது ஒரு வருடைய கட்டுக்குள் அடங்குகிறதல்ல, எல்லாமதற்குள் ளடங்கி யிருக்கின்றன, நான இப்படி அந்தச் சமுதிரத்தில் றப்புடைய காவலினலே 40-நாள் வரைக்கும் அன்னம் ஆகாரமின்றி அப்பல கையின் மேலிருக்கக் கடலின் அலைகளில் அப்பலகையானது தப்பித்

தடுமாறி கடைசியில் ஹக்கதஆலா ஓரங்கொண்டுவந்து சேர்த்தான், அப்பொழுது நான் கீழேயிறங்கி நடக்கப்போனால் எனக்கு எள்ளளவும் வல்லமையில்லை. அப்படியும் நான் தட்டுக்கெட்டுத்தடுமாறித் தள்ளாடித் தள்ளாடித் அசந்து நடந்துபோவேன், அந்தக்காட்டிலுள்ள பழங்களைப் பறித்துத்தின்று பசியினைப்பாறுவேன், இப்படி அநேக நாள் திரிந்தேன், அப்படி அலைந்து திரிந்துவருகிற நாளையில் ஓரிடத்தில் அந்திவேளையிற்றங்கினேன், அப்பொழுது வெகு தொலையில் ஓரிடத்தில் பிரகாசிக்கக்கண்டு அது ஹக்க ஆலாவினுடைய ஒளிவென்று நான் மனதிலெண்ணினேன், பின்னும் இத்தனை சோதியாய்த் தெரிவது அங்கோர் பட்டணமாயிருக்கும் இல்லாவிட்டால் இவ்வளவு வெளிச்சமிராதென்றெண்ணி அன்றிரவை அங்குபோக்கி விடியற்காலத்தில் அவ்விடம் விட்டெழுந்து முன்னோக்கி மெத்த வருத்தங்களெடுத்து நடந்து அவ்விடம் போய்ச்சேர்ந்தேன். அங்குபோய்ப் பார்க்கும் பொழுது ஒரு மனிதரையும் காணேன், சமமாகிய பூமியும் சோலையுமாயிருந்தது, அங்குக்கணக்கற்ற மாணிக்கமும், முத்தும், நவரத்தினமுமாயிருந்தது, அவைகளுடைய ஒளிவுகளிப்படிப் பிரகாசித்துக் கொண்டிருந்தது, அதுகளை கண்ணுற் கண்டவுடனே அதிக விருப்புற்று அதில் சில தினுசுகளை வாரி யெடுத்துக்கொண்டேன், அப்பொழுது என் மனதிற்கு இன்னும் உன்னுடைய ஆசையும் பிரியமும் தொலையவில்லையா? வென்று புத்திசொல்லி இப்படிப் பட்ட வருத்தங்கள் மூழ்கியும் துனியாவை விரும்புகிறாயேயென்று எடுத்தவைகளை அங்குபோட்டு விட்டு வெறுங்கையாகவே என் வழியை பிடித்து நடந்தேன்.

---

## 8-வது கிஸ்ஸா.

### சில முஸீபத்துகளைக் கண்டதும் பயந்ததும் ஓடினதும் ஆகியவைகளின் விபரம்.

இக்கிஸ்ஸாவானது அதிக விருப்பமுள்ளது, உலகின் ஆசைகளையும் இன்பங்களையும் நீக்குமானதாக விருக்கும். அறிவுள்ளோர்களுக்குக் கேட்கக்கேட்க முழுதும் கேட்கவேணுமென்று மிகுந்த இன்பத்தையும் ஆசையையும் தரும், (யா அலியே) பின்னும் என் தலைமேல் வந்து விடியுமான முஸீபத்துகளும், வருத்தங்களும் விசனங்களும் மெத்தவுண்டு, அவையில்கொஞ்சம் சொல்லுகிறேன், நான் மிகுந்த பயத்தோடு வருக்கமெடுத்துச் சஞ்சலத்தோடு வழியை பிடித்து முன்னோக்கி நடக்கையில் ஒன்றுக்கிரண்டாக பெரிய பலாயொன்று எதிர்ப்பட்டது. அது எப்படிப்பட்ட பலாயெனில், இருந்தாப்போலிருந்தது, பெரிய படைப்புண்ட ஒரு

பாம்பு வாயைத் திறந்துகொண்டு கோடைபிடிபோல் சத்தமிட்டு கன்னங் கறேலென்று என் முன்னாக வந்தது. அதை நான் கண்டு கரபராப்பட்டுக் கலக்கங்கொண்டு பின்வாங்கி ஓடினேன். அப்பாம்பு என்பின் தொடர்ந்து தூரத்திக்கொண்டு வந்தது. அப்பொழுது நான் மிகுந்த பயத்தோடு ஹக்க ஆலாவினிடத்தில் ஓ நாயனே நீ இப்பொழுது என்னை இந்தப் பலாயாகிய பாம்பினுடைய ஆபத்தை விட்டு எளிதாக்கி விடென்று கெஞ்சித் துஆக்கேட்டான். அது ஏனெனில், இனி நாம் இந்தப் பாம்பைத் தப்பிப்பிழைக்கப் போகிறதில்லையென்று நம்பிக்கையற்றவனாய்விட்டேன், அப்போது முன்னால் எனக்குப் பரிகற்றுக்கொடுத்திருந்த இஸ்மை ஞாபகஞ் செய்து ஓதினேன் (யா அலியே) அப்பொழுது நான் அந்த பலாயைக் கொண்டு 4-நாள் மட்டும் எங்கும் தங்காமல் ஓடினேன். கடைசியில் திரும்பிப் பார்த்தேன். அப்பொழுது அந்தப் பலா என் பின் வராமல் நின்றுவிட்டது. அதனால் நான் வருத்தமெடுத்தேன், இனி அந்தப் பலாயைக்கொண்டு தப்புகிறதில்லையென்று பயந்து ஒரு மரத்தடியில் போய் நின்று என்னுடைய இரண்டு கையை யெடுத்து ஹக்கஆலாவினளவில் யாறப்பே! இனிமேல் என்னால் யாதொரு வல்லமையுமில்லை, எனக்கு நிரம்ப மேன்மையிருக்கிறது மவுத்தாய் போகிறது. ஆகையால் எனக்கு ஒரு வருத்தமும் விடாமல் மவுத்தாக்கிவிடு, ஓ! ஓ! அல்லைய என்னால் முடியவில்லை யென்று துஆக் கேட்டேன், அப்படிப்பட்ட சமயத்தில் அங்கு என்னிடத்திற்கு இருந்தாப்போலிருந்து ஒரு மனிதன் வந்தான்.

அம்மனிதன் என்முன் வந்து சலாஞ்சொல்லி மிகுந்த மரியாதை செய்தான், அவனை நான் பார்த்தேன், அவன் முகம் பதினாலாம் பக்கத்து நிலவுபோலிருந்தது, உடைகள் உயர்ந்தஉடைகளை யுடுத்திருந்தான், அவன் என்முகத்தைப் பார்த்து ஓ தமீமுல் அன்சாரியே! நீ என்னத்திற்காக இவ்வளவு சஞ்சலப்படுகிறாய், நீ உன்னுடைய மனதைச் சந்தோஷப்படுத்து, உன்னுடைய பட்டணமும் வீடுங்கிட்டே ஆய்விட்டது, என்று சொன்னான். அந்தச் சந்தோஷமான வார்த்தையைக் கேட்டு உனக்கு அல்லாஹுதஆலா றஹ்மத்துச் செய்ய நீ என் மனதுக்கத்தை நீக்கிச் சந்தோஷ வார்த்தைகளைச் சொல்லென்று கேட்டேன், அதற்கவன் என் முகத்தைப்பார்த்து இப்பொழுதே உன்னை உன்வீடு கொண்டு போய்ச் சேர்ப்பேன், இன்னும் உன்னைச் சிலநாள் வரைக்கும் ஒரு தேசத்தை யாளும்படியான அரசனாகவும் உன்னுடைய விசனங்களும் வருத்தங்களும் நீங்கும்படிச் செய்வேன், நீ என் சொல்லைத் தட்டாமற் கேட்பாயாகிலும் நடப்பாயாகிலும் இவ்வளவு வேலைகளுஞ் செய்வேன். இல்லாவிடில் இல்லையென்று சொன்னான், அதை நான் கேட்டு அப்படியே ஆகட்டும் ஒருபோதும் உன் சொல்லைத்

தட்டுகிறதில்லையென்று சொன்னேன், (யா அலியே) அதன் பின் நடக்கிறதைச் சொல்லுகிறேன் கேளுங்கள், என்னை அவ்விடமே நிறுத்திவிட்டு கண்ணிற்கு மறைவாக யெங்கேயோயிருந்து நல்ல நல்லருசியுடைய நிக்மத்துகளையும் ஒருகூசாவிற்றண்ணீருங்கொண்டு வந்து என்னெதிரில் வைத்தான் அப்பொழுது எனக்குச் சிலநாள் பட்டினியானபடியினாலே அதுகளைக் கண்டவுடனே மிகுந்த ஆவலோடு எடுத்துத்தின்று நீரைக்குடித்து பசியாறிக்கொண்டேன், அப்போதவன் எனக்குக் கொண்டுவந்தவைகளில் சில தினுசுகளை யெடுத்து கையிற்கொடுத்து இதை நீ உன்னிடமாக உயிரைக் காப்பாற்றுவது போல பத்திரமாக வைத்திரு, நான் எப்பொழுதாவது செத்துப்போனாலும் வெந்து சாம்பலாய்ப்போனாலும் உடனே இதுகளையென்பேரில் போடு, நான் உயிர்ப்பெற்று எழுந்திருப்பேன், ஆகையினால் இதை உன் துணியில் முடித்துக்கொள்ளென்று சொல்லிக்கொடுத்தான். அதைநான் வாங்கி இதிலென்ன மருமமிருக்கிறதோவென்று வாங்கிக்கொண்டேன். பின்னும் என்னைப் பார்த்து நீ நான் சொல்லியபடி நடப்பாயாவென்று கேட்டான். அப்படியே நடக்கிறேனென்று சொன்னேன் அப்பொழுதவன் அவ்விடமே யிருந்தாப் போலிருந்துகீழே விழுந்து உருண்டு புரண்டு தன்னைப் பெரியகோழி யுருவாக்கிக் கொண்டான். என்னைப்பார்த்து நீ ஒன்றுக்கு மஞ்சாமல் என்பேரிலேறிக் கொள்ளென்று சொன்னான். நான் பயந்து ஏறுவிட்டால்என்ன செய்வானோவென்றஞ்சி உடனே அந்தக் கோழியின் முதுகின்பேரி லேறிக்கொண்டேன்.

உடனே அக்கோழி என்னைத் தூக்கிக்கொண்டு காற்றைப் போல் பறந்து வானத்தளவில் வீசுங்காற்றையுங் காட்டினது, இப்படிச் சில நாளளவும் வானத்துமட்டும் பறந்துபோகையில் அங்கோர் பெரிய மலை ஒன்றிருந்தது அம்மலைபின்மே லென்னைக் கொண்டுபோய் யிரக்கினது, பின்பு ஒரு நாழிகைவரைக்கும் எங்கேயோ போய் மறைந்திருந்துவந்து பின்னும் என்னைப்பார்த்து நான் சொன்னபடி மறக்காமல் செய்வாயாவென்றது, பின்னுமென்னை அங்கிருந்து தூக்கிக்கொண்டு பறந்து பூமியைவிட்டு வானத்தின் கிட்டே கொண்டுபோனது. அங்கேபோய் ஒருகுகையினுள்ளே யென்னை யிறக்கினது. அந்தக்குகைக்குள் எத்தனையோ நாள் இருட்டினுள்ளே போனோம். அங்கே இராப்பகலென்று ஒன்றுந் தெரியவில்லை, இப்படி யெத்தனையோ நாள் அவ்விருட்டினுள் போகையில் அதன்பின்பு என்னை வெளிச்சத்திற்கொண்டுவந்து அங்கே பெரிய சமுத்திரமொன்று எதிரில்வந்தது. அதையுந்தாண்டி அப்புறம் சென்றேன், பின்னுமொரு கடல்வந்து எதிர்ப்பட்டது அங்கோர் மலை வானத்தளவு உயர்ந்தமலை ஒன்றிருந்தது. அங்கோர்மெத்தை யொன்றிருந்தது, அதற்கு வாசற்படிக்குப் பூட்டிட்டிருந்தது, அப்

பூட்டின் பேரில் சுலைமான் அலைஹிஸ்ஸலாமுடைய கலிமா எழுதி யிருந்தது. அப்பொழுது அந்தத் தேவானது என்னைப்பார்த்து நான் சொன்ன சொல்லின்பேரில் நிலையாயிருக்கிறாயாவென்று கேட்டது. அதற்கு நான் நிலையாயிருக்கிறேனென்று சொன்னேன். அப்பொ ழுதவன் அங்கே உருண்டு புரண்டு கோழியின் உருவைநீக்கி தன் சுயரூபமெடுத்துக்கொண்டான், பின்பு அப்பூட்டிற்கு கயிறுகட்டி யிருந்தது, அதைப்போய் அவிழ்க்கவும் பூட்டுக்கீழே விழுந்துவிட் டது, அப்பொழுதவன் என்னையுங் கூட்டிக்கொண்டு வாசற்படியில் உட்கார்ந்தான், அப்பொழுது நான், அங்கே பார்த்தேன், யாஅலி யே) எண்ணிக்கையற்ற தேவுகளிருக்கின்றது, அதுகள் என்னைத் தின்னும்படியாகப் பார்த்ததுகள், அப்பொழுது இந்தக்கயிற்றை அதுகளுக்குக் காண்பிக்கவும், அந்தத்தேவுகள் கயிற்றைப்பார்த்து தலையைக் கீழே போட்டுக்கொண்டதுகள், அப்பொழுது நாங்கள் இரண்டாவது வாசற்படிக்குள் போனோம், அளவற்ற பலாய்களைக் கண்டோம், இன்னும் அளவற்ற பாம்பும் தேள்களுமிருந்தது, அது களைக் கண்டவுடனே என்னுடலெல்லாம் நடுக்கலெடுத்துக் கொண்டது, அதுகளு மென்னைக்கொல்ல நாடினது, அது களுக்கும் அந்தக்கயிற்றைகாட்டவும் பார்த்து சும்மாயிருந்து விட் டதுகள். அவ்விடம்விட்டு மூன்றாவது வாசற்படிக்குள் போனோம், (யா அலியே) அவ்விடத்தின் சங்கதிகள் யாதெனில், அங்கே கணக்கி லடங்காத இராட்சிச கூட்டமிருந்து, அதுகளெங்களை புசிக்க நாடினதுகள், அங்கு அந்தக் கயிற்றைக்காட்டவும் அதுகள் பார்த்துத் தலைகுனிந்துவிட்டது, அவ்விடம்விட்டு 4-வது வாசலைத் தாண்டி அஞ்சாவது வாசற்படிக்குள்போனோம், கணக்கில்லாத புலிகளிருந்தது, அதுகளுமெங்களைக் கிழித்துத்தின்ன நாடினது, அதுகளுக்கும் அந்தக் கயிற்றை காட்டினோம் அதுகளும் தலை கவிழ்ந்துவிட்டது.

அவ்விடம்விட்டு ஆறாவது வாசற்படிதாண்டி ஏழாவது வாசற் படிக்குள்ளே போனோம், அங்கே சில புதுமைகளைக் கண்டேன். உயிரைவதைசெய்யும் படைப்புகள் உலகத்தில் எத்தனை வித முண்டோ அத்தனை விதமான படைப்புகளும் அங்கேயிருந்தது. எட்டாவது வாசற்படிக்குள் போனோம், அங்கே பெரிய சிம்மாதன மொன்று முத்து, மாணிக்கம், கோமேதகம், புஷ்பராகம் முதலிய நவமணிகளினால் சிங்காரித்திருந்தது, அதுஹக்த ஆலாவின் குதறத்தினால் படைப்புண்டானதேயன்றி மனிதரால் செய்தவை யல்ல, அந்தச் சிம்மாதனத்தின் பேரில் பதினாலாம் பக்கத்து நிலவி னொளிபோல் முகமிலங்கவும், நல்ல வாலிபக்காரராகவும் கையை மார்மேலும் வைத்துக்கொண்டு படுத்து உல்லாச நித்திரை செய் துக்கொண்டிருந்தார், அவனுடைய தலைமாட்டில் மாணிக்கத்தால்

படைப்புண்ட குத்துவிளக்கொன்று எரிந்து கொண்டிருந்தது, அதனுடைய ஒளிவையும் வடிவையும் இவ்விதமென்று சொல்ல முடியாது. கையின் சுண்டு விரலில் ஒரு மோதிரமிட்டிருந்தது, அது சுற்றிலும் நாலு கற்களிருந்தது, அந்த கற்கள் "சுஹறு" வென்னும் நட்சத்திரம்போல பிரகாசித்துக்கொண்டிருந்தது, அங்கே நாலு பாம்புகள் காவலாக விருந்ததுகள். நான் இந்த அதிசயங்களையெல்லால் என் கண்ணூரக்கண்டு பின்பு என்னை அழைத்துப்போன தேவைப்பார்த்து இவ்வித உல்லாச நித்திரையாகவும், அலங்காரமாகவும், காவலாகவும் படுத்து நித்திரை செய்பவர் யாரென்று கேட்டேன். அதற்கந்த மூதேவி இவர் சுலைமானபியென்று சொன்னான், பின்னுமவன் என்னைப்பார்த்து நான் இவ்வளவு வருத்தமெடுத்து பலாமுஸீபத்துகளுக்கும் பயப்படாமல் இவ்வளவு தூரம் வந்தது இந்த மோதிரத்திற்காகவேண்டி இம்மோதிரம் என் கைவசமாக அகப்படுமாகில் உலகத்திலுள்ள யாவற்றும் என்னுடைய சொல்லைக்கேட்டு எனக்குப்பயந்து நடுங்கி நடக்குமென்று சொன்னான், அப்பொழுது நான் அந்த மூதேவியைப்பார்த்து அடா பயித்தியக்காரா, இவர் அல்லாஹுூத் தஆலாவுடைய நபி மிகுந்த சங்கை பெற்றவர், அதிக பலமுள்ளவர், ஆகையால் நீ இப்பொழுது நினைத்துவந்த நினைப்பை ஒழித்துவிடு வென்று சொன்னேன், என் சொல்லைக்கேட்டு அப்பாவி அதிக கோபங்கொண்டு என்னை யுறுக்கிப்பார்த்து நீ நான் சொன்னவேலையைச் செய்யென்று சொல்ல, அதற்கு நான் பயந்து சும்மாயிருந்துவிட்டேன், அப்பொழுதவன் தன் கையிலிருந்த கயிற்றை யென்கையிற் கொடுத்து நான் வெந்து சாம்பலாகிப்போவேனாகில் இந்தக்கயிற்றாலென்பேரில் அடியென்று சொன்னான். (யாஅலியே) அந்த மூதேவியானவன் அந்த மோதிரத்தைக் கழட்ட கிட்டே நெருங்கினான், அப்பொழுது இருந்தாப்போலிருந்து அவன் பேரில் நெருப்பு வந்து வீழ்ந்து சாம்பலாய் வெந்துபோனான். அப்பொழுது நான் அச்சாம்பலின் பேரில் என் கையிலிருந்த கயிற்றாலடித்தேன், உடனே அவன் உயிர்பெற்று எழுந்தான். பின்னும் என்னைப்பார்த்து நீ யிந்தவேலையை மறக்காமல் சாக்கிறதையோடு இருந்துசெய்துவா யென்று கட்டளையிட்டான், பின்னும் மோதிரத்தைக் கழட்டப்போனான். பின்னும் முன்போல் வெந்து சாம்பலாகிப்போனான், பின்னும் முன்போல நான் கயிற்றாலடித்தேன்.

உயிர்பெற்றெழுந்தான், பின்னு மென்னைப்பார்த்து முன் சொன்னபோல சொல்லிக்கட்டளையிட்டான். அதற்கு நான் அப்படியே ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டான், பின்பு (யாஅலியே) அம்மோதிரத்தைக் கழட்ட துரிதப்பட்டான், அப்பொழுதுமவன் பேரில் நெருப்புவந்து வீழ்ந்து வெந்து சாம்பலாய்ப்போனான்,

பின்னும் நான் அக்கயிற்ருலடித்தேன் உடனே உயிர்பெற்றெழுந் தான், என்னைப்பார்த்து அதிகக்கிருபையோடு ஆண்டவனின்பேரில் கிருபை செய்யவென்று வாழ்த்தி, உன்னை உன் வீட்டிற்கொண்டு போய்ச்சேர்ப்பதுமன்றி ஒரு தேசத்தினுடைய அரசும் ஆளும்படி உனக்குக்கொடுப்பேன், நீ இந்த வேலையின் பேரில் நிலையாயிரு வென்று சொன்னான். அதற்கு நானப்படியே நடக்கிறேனென்று சொன்னேன், பின்னும் அப்பாவி மோதிரத்தைக்கழட்ட கிட்டே நெருங்கினான், அப்பொழுதும் இருந்தாப்போலிருந்து நெருப்பு அவன்பேரில் வந்து வீழ்ந்து அதனால் வெந்து சாம்பலாய்ப் போனான். அந்த நாலாவது முறை நான் கயிற்ருல் அடிக்க நாடி னேன், அந்நேரவேளையில் ஹக்த ஆலாவின் உத்திரவின்படி ஜிபுரை யீல் அலைஹிஸ்ஸலாம் வந்து என்னைப்பார்த்து ஓ தமீமுல் அன் சாரியே நீ கயிற்ருல் அடிக்கவேண்டாமென்று சொன்னார். நான் அடிக்காமல் சும்மா யிருந்துவிட்டேன், அதனால் அந்தப் பாவி எழுந்திராமல் ஜஹன்னமென்னும் நரகம்போய்ச் சேர்ந் தான். அப்பொழுது ஜிபுரையீல் அலைஹிஸ்ஸலா மென்னைப் பார்த்து நீ என் சொல்படி நடந்தபடி யினாலே உயிர் பெற்ருய், இன்னும் இந்தக் தேவானது கொடிய நடத்தை யுள்ளது, இதனிடத்தில் சூனியத்தினல் செய்த ஒரு மோதிர மிருந்தது, அந்த மோதிரத்தினுடைய வல்லமை, அதனால் இவன் கைவசமாக அநேக தேவுகளும், பரிகளும் அடங்கியிருந்தது. இன்னும் சுலையுமான் அலைஹிஸ்ஸலாமுடைய மோதிரம் ஒன்று மில்லை, ஆகையால் இந்தக் காபிருகிய தேவு அதையுங் கழட்டி யெடுத்துக்கொள்ளத் திரிந்து அலைந்து கடைசியில் இவ்வேலை செய்யத் தலைப்பட்டான், அதனால் இவனை ஹக்தஆலா கொன்று நரகவாதியாக்கிவிட்டான், ஆகையால் நீ இவன் வசமாயிருக்கும் சூனியத்தின் மோதிரத்தை யெடுத்து வைத்துக்கொள்வாயாகில் உனக்குத்தேவுகளும் பரிகளும் அஞ்சி ஒடுங்கியிருக்கும். நீ அவை களுக்கெல்லாம் மேன்மையாயிருப்பாயென்று அம்மோதிரத்தை என் கையிற் கொடுத்துவிட்டு அவ்விடத்தை விட்டு வெளியாக்கி என்னைக் கிபுலாவின் புறமாகப் போவென்று சொல்லிவிட்டு மறைந்துபோனார்.

---

## 9-வது கிஸ்ஸா.

போகிறவழியில் ஒரு மேத்தையைக்கண்டதும்.
அதனுள்சேன்றதும், அங்கோருத்தரோடு சந்தித்ததுமான விபரம்.

இந்தக்கிஸ்ஸாவானது மாணிக்கம் முத்துகள் நிறைப்பிய சொல்லாகியது. ஓ அண்ணு இப்பெட்டியைத் திறந்து முத்து மாணிக்கங்கள் சிதறிவிடு, சகலபேரும் பொறுக்கிக்கொள்ளட்டும், (யா அலியே) எனக்கு ஜிபுரையீல் அலைஹிஸ்ஸலாம் சொன்ன படியே நானந்த மோதிரத்தை எடுத்துக்கொண்டு அவர்காண்பித்த வழியாகவே சஞ்சலமென்னும் உடையை யுடுத்திக்கொண்டு மேற்குப்புறமாகக் காட்டில் முன்னேக்கி நடக்கும்போது, அங்கோர் விசாலமாகிய மெத்தை ஒன்று எதிர்ப்பட்டது, அம்மெத்தை யெப்படிப்பட்ட வேலைகள் செய்திருந்ததெனில், வெள்ளியினுல் செங்கல்களும், பொன்னினுல் சாந்துகளுமாகக் கட்டடம்கட்டியிருந்தது, அதைக்கண்டு அதனுள் (பிஸ்மில்லாவென்று) சொல்லி உள்ளே நுழைந்தேன், அங்கொரு பிள்ளை பதினாலாம்பக்கத்து நிலவுபோல முகமும், திரண்டுருண்ட வடிவமும், சிரித்தவாயும், நல்லகுணமும், அன்பாசாரமுள்ள கிருபையான பார்வையுமுள்ள கண்ணுடையவராகவுமிருந்தார், அவரைப்போல் மற்ருெருவரை நான் எங்குங் கண்டதில்லை, நானவரருகில் போனேன், அவரென்னைக் கண்டவுடனே முன்னும் தான் சலாஞ்செய்து ஓ தமீமுல் அன்சாரியே! யென்ன உன்பேரில் முடிவாயினது, இன்னும் உன்னைக்கொண்டு போன கொடிய பாதகனுகிய தேவு உன்னை எங்கே கொண்டுபோய் விட்டுவிட்டான், என்னென்ன மூஸீபத்தாகிய வேலைகளைச் செய்தானென்று முன்பின் கண்டவர்களைப்போல என்பெயர் சொல்லிக் கூப்பிட்டு இப்படியெல்லாங் கேட்டார், அப்பொழுது நான் முதலிலிருந்து சுலையுமானபி கிட்டே போன வரைக்கும் ஒன்றுந்தவருமல் சொல்லிவந்தேன், அப்பொழுது அப்பிள்ளை யென் முகத்தைப் பார்த்து, ஓ தமீமுல் அன்சாரியே! நானும் அந்த வெந்துபோன தேவைப் பார்த்து நீ தீவிரஞ் செய்யவேண்டாம், உன்னலொரு போதும் அவ்வேலைமுடியாது, அவரோஹக்தஆலாவின் தூதராகிய சுலையுமானபி அவருடைய மோதிரத்தைக் கழட்டிவர உன்னல் முடியாது, அப்படித் துணிந்து போவாயாகில் கடைசியில் பெரிய வருத்தத்தை யெடுப்பாய், அதனுல் சீரழிந்து ஹலாக்குப் பெறுவாயென்று நானுவிதமாகிய மொழிகளெல்லாஞ் சொன்னேன், அவன் என் சொல்லைக்கேட்காமல் அழிந்துபோனதே மெத்த நலமாயிற்றென்று சொன்னுர். அப்பொழுது நானவரைப்பார்த்து என்னை நீ இன்னுனென்று எப்படி அறிந்தாயென்று கேட்டேன், அதற்கவர் "தவுறுத்து" வேதத்தில் பின்காலத்தில் நபிசல்லல்

லாஹு அலைஹிவசல்லமுடைய அஸ்ஹாபுகளில் நின்றும் ஒருவர் இன்ன பேருள்ளவர் இன்ன காலத்தில் இவ்விடத்திற்கு வருவா ரென்று சொல்லியிருந்தது. அது இப்பொழுது என் நினைப்பில் வந்தது, ஆகையால் நான் தங்களுடைய பேரைச் சொல்லியழைத் தேன், அல்லா சுபுஹானஹுவத் தஆலா தங்களை என் கண்ணிற் கொண்டு வந்து காட்டினானென்று சுகூறச்செய்து என்னைப்பார்த்து நான் ஈமான் கொண்டு இசுலாமாகிக் கரையேறவேணும், ஆகையால் எனக்குக் கலிமாச்சொல்லிக் கொடுவென்றது, உடனே நான் கலிமாச்சொன்னேன், அவருங் கலிமாஓதி யீமான் கொண்டார்.

அதன்பின்பு, (யா அலியே) நான் அந்தப்பிள்ளையைப்பார்த்து பரிதேவுகளின் இடத்தில் நீ என்னவிதமாக வந்தாயென்று கேட்டேன். அதற்கு அப்பிள்ளை நானொரு பாதுஷாவினுடைய பிள்ளை, என்னுடைய பட்டணம் இன்னபட்டணம், இப்பொழுது உன்னைக் கொண்டுபோய் சுலையுமானபியுடைய மோதிரத்தைத் திருடப்போன அந்த மூதேவி தேவானது என் தாயையும் இங்கே யெடுத்துக் கொண்டுவந்து இந்த மெத்தைக்குள் வைத்துவிட்டது நான் அப்பொழுது என்தாயாருடைய வயிற்றினுள்ளிருந்தேன் இங்கே வந்தபின் என்னைப்பெற்றாள், அதன்பின்பு என் தாயாரிறந்து போனாள், அன்று முதலாக இந்தத்தேவுடைய வசமாக வளர்ந்து வந்தேன். என்னையும் மிகுந்த பிரியமாக வளர்த்து வந்தது, என் கைவசமாக எத்தனையோ தேவுபரிகள் என் உத்திரவின் பேரில் நடக்கும்படியாகக் கட்டளையிட்டு எனக்கு அதிகாரமுங் கொடுத்தது அவைகளெல்லாம் எனக்குப்பயந்து கைகட்டி வாய்புதைத்து என் சொல்படி நடந்து வருகின்றதுகள் என்று சொன்னார் (யா அலியே) அப்பொழுது நான் அப்பிள்ளையைப்பார்த்து இந்தட லாமுவஸீபத்தில் இன்னும் எத்தனை நாள்வரைக்கும் சிக்கியிருப்பேன், ஆகையா லெனக்குப் போகவழி காண்பியென்று கேட்டேன். அப்பொழுது அப்பிள்ளை என்னைப்பார்த்து நீ என்கூடவா இன்னும் உன்னுடைய பட்டணம் 100-வருஷத்தின் வழிப்பயண முண்டென்று சொல்லி னது அந்தச்சொல்லைநான் கேட்டமாத்திரத்தில் ஹா! ஹா! வென்று பெருமூச்சோடு ஒரு சப்தமிட்டு இனி யெனக்கு அவ்வளவு வயது முண்டா! நானும் உயிரோடிருப்பேனா! வென்று நம்பிக்கையற்றுக் கைசேதமுள்ளவனாகி விட்டேன், அப்பொழுது என்னை அழைத் துக்கொண்டு போயினது, நானுங் கூடவேபோனேன், அப்பொழுது அங்கோர் தேவின் கிட்டே போனது, (யா அலியே) அந்த தேவு எப்படிப்பட்ட கொடிய மூதேவியெனில், அதைப் பார்த்த வர்கள் இறந்துபோவார்களே யன்றி, ஒருகாலும் பிழைக்க மாட்டார்கள். அந்தத் தேவு இந்தப் பிள்ளையைப் பார்த்தவுடனே நடுநடுங்கிவிட்டது. அப்பொழுது அந்தத் தேவைப் பார்த்து என்

சொல்படி நடக்கவேணுமென்றது, அந்தத் தேவு பயந்து நான் வியாதியாயிருக்கிறேன், ஆனாலும் தங்கள் சொல்லை என் தலைமேலேற்றிச் செய்வேன், உன் சொல்லைக்கொண்டு நான் முகந்திருப்பேன் நீ கை காட்டிய விடத்திற்குக் காற்றாய்ப் பறப்பேனென்றது, அப்பொழுது அப்பிள்ளை இவரைப் பத்திரமாகக் கொண்டுபோய் மதீனத்திலிவருடைய வீட்டில் விட்டுவாவென்று விடைகொடுத்தது அதற்கு அந்தத் தேவு அப்படியே ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டு என்னைத் தூக்கிக்கொண்டது, (யா அலியே) அக்கொடிய பாவியாகிய தேவுகாற்றைப்போல் வானத்தளவாகப் பறந்து அங்கிருந்து கீழே போட நாடினது, (யா அலியே) நானென்னென்று சொல்வேன், என்னுடன் நானாவிதமாகிய கொடிய வார்த்தைகளெல்லாம் சொல்லினது, அந்நேரம் என் கையில் மோதிரமிருந்தபடியினாலேயும் பரிகற்றுக்கொடுத்த இஸ்மினுடைய பெலத்தினாலேயும் அதுசெய்த வல்வினை ஒன்றும் என்னை ஹலாக்குச் செய்யவில்லை. அங்கே ஒரு சமுத்திரமொன்று எதிர்ப்பட்டது, அந்தச் சமுதிரத்தினோரமாக பெரிய ஒருமலை ஒன்றிருந்தது அந்த மலையைப்பார்த்து என்னை தூக்கி யெறிந்துவிட்டது. அம்மலைக்கு அதிகாரனாக அங்கே ஒரு கொடிய தேவு வொன்றிருந்தது.

அந்தத் தேவு எவ்வளவு பெரிதாய் இருந்ததெனில், என்னையும் என்னைக் கொண்டுபோன தேவையும் விழுங்கும்படியானதாயிருந்தது. அதைகண்டு நான் பயந்தேன், அப்பொழுது இந்தத் தேவானது உன்னுடைய மோதிரத்தைக் கழற்றி அந்தத் தேவுக்குக் கொடுப்பாயாகில் உனக்கு வழிகாண்பிக்கும், நீயும் வீடுபோய்ச் சேருவாயென்று சொல்லினது, உடனே நான் மோதிரத்தைக் கழட்டி அதன் கையிற் கொடுத்தேன், அம்மோதிரத்தை வாங்கிக் கொண்டு அக் கொடிய தேவானது என்னை மோசம்பண்ணி மோதிரத்தை யெடுத்துக்கொண்டு தனியாய் விட்டுவிட்டு ஓடிப் போய்விட்டது. அப்பொழுது நான் அம்மலைமேல்நின்று பெருங் கூச்சலோடு அழுதேன், பின்னும் முன்னோக்கி நடந்தேன், (யா அலியே) அவ்விடம்பட்ட முஷீபத்தை நானென்ன சொல்லப் போகிறேன், என்னுடைய அறிவும் நிலையும் என்னைவிட்டு விலகின போது அங்கோரிடத்தில் முத்து மாணிக்கங்களினால் சிங்காரித்த ஒரு சிம்மாதன மொன்றிருந்தது. அதன்பேரில் வானத்தளவு உயரமாக ஒரு பெரிய தேவு வொன்று உட்கார்ந்துக் கொண்டிருந்தது. அதை நான் கண்டவுடனே கிடுகலங்கி விட்டேன், அப்பொழுது அந்தேவு அதிகக் கோபங்கொண்டு ஆங்காரத்தோடு சத்தமிட்டு என்னைப் புசிக்க எழுந்தது. அதை நான்கண்டு மலைமேலிருந்து எகிறிக்கீழே குதித்துவிட்டேன், அப்பொழுது நான் என்னுடைய உறுப்புகளெல்லாம் துண்டு துண்டாகி விடுமென்று

எண்ணினேன், அந்த ஆபத்தை அல்லாஹுத் தஆலா பார்த்து ஒரு சேதமும் வாராதபடி பூமியிலாக்கிவிட்டான்.

---

## 10-வது கிஸ்ஸா.

ஒரு மெத்தையைக்கண்டதும், அதனுள் சென்றதும், அங்கு இளைப்பாரியதுமான விபரம்.

இக்கிஸ்ஸாவானது பேரின்பத்தைத்தரும். ஆகையாலிதைச் சீக்கிரமாகச் சொல்லிமுடி, இனிமேல் வருவது பெரிய புதுமை களுள்ளது, இதைக் கேட்க நிரம்பவும் இச்சிக்கிறார்கள். நீ அவர் களுக்குத் தீவிரமாக நன்றாய்ச் சொல்லு, (யாஅலியே) நான் அம் மலையின்மேலிருந்து கீழேவிழுந்து யாதொரு ஊனங்களில்லாம லெழுந்து முன்னோக்கிச் சிலதூரம் நடந்தேன், (யாஅலியே) நானெப்படி நடந்தோடினேனெனில், ஒருவாரம் வரையில் திரும்பிப் பார்க்காமல் அந்தத் தேவுடைய பயத்தினால் ஓடினேன், அவ்வழி யில் மேற்குபுறமாக ஒரு மெத்தையொன்றிருக்கக் கண்டேன். அப்படிப்பட்ட அழகாகிய மெத்தை ஒரு மனிதனுங் கண்டறியான். அப்பொழுது நான் அம்மெத்தையின் கிட்டேபோனேன், அம்மெத் தையின்பேரில் ஒளிவு இலங்கிக்கொண்டிருந்தது, அதன் வாசற் படிக்கு பூட்டிட்டிருந்தது. அப்பூட்டின்பேரில் (பிஸ்மில்லா) சொல்லி கையைவைத்தேன், அப்பொழுது தானாக அப்பூட்டுத்திறந்து போயினது அதற்குள்ளேபோய் நான் கண்ட தென்னவெனில், பொன் வெள்ளியினால் அமைந்த சுவர்களும் கட்டடமும், முத்து மாணிக்கங்களினால் சிங்காரித்து நானாவிதமான அலங்கரிப்பாக அநேக அறைவீடுகளிருந்தது. அதுகளில் ஒருமாடி அதிக உயரமா கவும், அழகாகவும், சிங்காரிப்பாகவுமிருந்தது. அதை கண்டு அம் மெத்தையினுள் புகுந்தேன், அதனுள் அதிக மணவாடையும் மிகுந்த சந்தோஷமாகவுமிருந்தது. அங்கே குதறத்தாலாகிய நிஃமத்துகளு மிருந்தது. இன்னும் சுடச்சுடச் சோறும் கூசாவில் குளிர்ந்த ஜல மும், வெற்றிலை பாக்கு, லவுங்கம் ஏலம், ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி இவைகளெல்லாம் வைத்துத் தயாராயிருந்தது. அவைகளை நான் கண்டு அதிக பசியுள்ளவனானபடியினாலே அங்கிருந்த சோற்றைப் பசியாறவுண்டு தவனமடங்கத் தண்ணீர் குடித்து தாம்பூலம் தின்று களையாறி சுற்றிப்பார்க்கையில், அங்கோரிடத்தில் ஒரு மெத்தைக்கு முத்து வெள்ளியாற்செய்த திரையொன்று கட்டிருந்தது. அதை கண்டு நான் அத்திரையை நீக்கி உள்ளே நுழைந்து என்னவிருக்கிற தென்று பார்த்தேன். அங்கேயிருக்கிற புதுமையை அல்லா அறிவான், எத்தனையோ நல்ல பிராயமுள்ள வாலிபக்காரர்கள் உதி ரத்திற்புரண்டு உடலிலிருந்து இரத்தமோடிக் கொண்டிருந்தது,

அவர்களெல்லாம் உயிரில்லாமல் மவுத்தாயிருந்தார்கள். இன்னும் அனேகருக்கும் புதிசான இரத்தம் ஓடிக்கொண்டிருந்தது. அந்த ஜவான்களுடைய முகங்களெல்லாம் பதினாலாம் பக்கத்து நிலவு போல் முகங்களிலங்கிச் செந்தாமரைப் புஷ்பத்தைப்போன்ற செழித்தமுகமாயிருந்தது. அதில் சிலர் கைவேறாகவும், சிலர் கால் வேறாகவும், சிலர் தலை வேறாகவுமாயிருந்தது. இதுகளையெல்லாம் நான் கண்டு பயந்து ஓடி வெளியே வந்துவிட்டேன்.

நான் கைகால் நடுக்கமோடு வெளியேவந்து பார்க்குமளவில் நாலுபேர் உருவின கத்தியோடு குதிரையின்மேலே நிற்கக்கண்டு, அதிகப் பயங்கொண்டேன், அப்போதவர்கள் என்னைப்பார்த்து ஓ தமீமுல் அன்சாரியே! நீ ஒன்றுக்கும் பயப்படவேண்டாம், சந்தோஷத்தை யெடுத்துக்கொள், உன்னுடைய சஞ்சலமெல்லாம் தொலைந்தோடுமென்று சொன்னார்கள். அச்சொல்லை நான்கேட்டு அல்லாஹுத் தஆலா உங்களுக்கு றஹ்மத்துச்செய்ய நீங்கள்யார் மனிதரா அல்லது யார் இவ்விடம் நிற்கிறீர்களென்று கேட்டேன். அதற்கு அந்த நாலு பேரும் நாங்கள் மனிதரல்ல மலக்குகள், இங்கு காவலாகக் காத்துக்கொண்டிருக்கிறோம். இது நூஹு அலைஹிஸ்ஸலாமுடைய இடமாயிருக்கும். அந்தச் சாமான்கள் கியாமத்துநாள் வரைக்கும் மிருக்கும், நீ இப்பொழுது தின்கிற உண்பனையும், நீ இங்கு ஹக்தஆலாவினுடைய கிருபையினாலே இங்கு அனுப்பினதாகவிருக்கும், இங்கு யாதாமொருவர் பசிதாகத்துடன் வருவார்களாகில் இந்தச் சோற்றை யுண்பார்கள். இது ஒரு பொழுதும் ஆறுகிறதில்லை, சுட்டுக்கொண்டேயிருக்கும். இந்த ஜலம் கவஸறினுடைய ஜலம், இதுவும் கியாமத்துநாள் வரைக்கும் குளிர்ச்சியாகவேயிருக்கும் நீகண்ட வாலிபக்காரர்கள் நபிஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களுடைய அஸ்ஹாபுகள், இவர்கள் ஷஹிதானவர்கள், இன்னும் நபிநாயகத்தின் கூட பீசபீல் செய்ய புறப்பட்டு காபிர்களுடன் சண்டை செய்து அதினால் ஷஹீதானவர்கள், அவர்கள் தங்களுடைய கத்திகளைத் தலைமாட்டுகளில் வைத்து உல்லாசநித்திரை கியாமத்து நாள் வரைக்கும் செய்கிறார்களென்று சொன்னார்கள். இவையெல்லாம் நான் கேட்டு புதுமைபட்டு ஹக்தஆலாவினுடைய குதறத்தையும் புதுமைகளையுங்கண்டு சுக்கூறுச்செய்து அவர்களைப்பார்த்து நானெப்படிப் போகிறதென்று கேட்டேன். அதற்கவர்கள் நீ கிபுலாவின் புறமாக தீவிரமோடி போவென்று சொன்னார்கள்.

---

## 11-வது கிஸ்ஸா.

ஒரு தோப்பினுள் சென்று அங்கு ஒரு பெரியவரோடு பேசிப் பின்னு மவ்விடம் விட்டுமீண்டு ஒரு வாலிபரோடு பேசிய விபரம்.

இக்கிஸ்ஸாவானது மேன்மையுள்ளது. இதை யின்புற்றுக் கேட்டவர்கள் இனிமேலென்ன வருகிறதோ கேட்போமென்று இச்சைபெறுமானதாக இருக்கும். (யாஅலியே) நான் பின்னல் பட்டதுன்பங்களைச் சொல்லுகிறேன் கேளுங்கள் அவ்விடம்விட்டுப் போகும்போது என்தலைமேல் பெரிய முஸீபத்தொன்று வந்தது, அது என்னவெனில், நான் தலையை முன்னோக்கி யென்மன விசனத்தினாலே குன்றி யெத்தனையோ நாள் வரைக்கும் நடந்தேன், அப்படி நடந்துபோகையில் ஒரு தோப்பொன்று எதிர்ப்பட்டது. அப்பொழுதுநான் தையிரியஞ்செய்து அத்தோப்பினுள் சென்றேன், அங்கேபோய் பார்க்குமளவில் அங்கோர் வலியுல்லா நீண்டதாடியுமாய் ஒளிவாகிய முகமுமாய் ஹக்தஆலாவினுடைய வணக்கத்தில் நிலைபாக விருந்தார். அப்பொழுது நான் மிகுந்த மரியாதையோடு அவர் முன்னாகச்சென்று சலாஞ் சொன்னேன். அப்பொழுதவர் என்புறமாகத் தன் மூகத்தைத் திருப்பி என்னைப்பார்த்து நீ தமீமுல் அன்சாரியாவென்றுகேட்டார். அதற்கு நான் ஆம், நான்தானென்று சொன்னேன். அப்பொழுதவர் நீ இங்கே யிருக்கவேண்டாம், தீவிரமாக இவ்விடம் விட்டு கிபுலாவின் புறமாக ஓடிப்போம். அப்படிப் போகும் வழியில் முன்னால் ஒரு வாலிபக்காரனைப் பார்ப்பாய். அவருடன் உன்னுடைய சேதிகளை யெல்லாம் சொல்லிக்கொள்ளென்று சொன்னார். அதைக்கேட்டு நான் உடனே அவ்விடம் விட்டு சீக்கிரமாய்த் திரும்பி (யா அலியே) பயங்கொண்டு மூன்று நாள் வரைக்கும் நடந்தேன். அப்படி நடந்து போகையில் உன்னிதமாகிய தோப்பொன் றெதிர்ப்பட்டது. அத்தோப்பைப்போல் நான் எங்குங் கண்டதில்லை. இன்னும் அந்தத்தோப்பில் வித விதமாகிய பூக்களும் காய்களும் பழங்களு மிருந்தது. இன்னும் குளங்களுமிருந்தது, எனக்கு மிகுந்த பசியிருந்தபடியினாலே சில கனிகளைப் பறித்துத் தின்றேன். அக்கனிகளுடைய ருசிகளும் வெவ்வேறாக விருந்தது. இன்னும் அங்கூர் பழதகின் பந்தர்க்களுமிருந்தது, (யா அலியே) அதனுடைய சங்கதிகளைக் கொஞ்சம் சொல்லுகிறேன் கேளுங்கள். அங்கூர் செடிகளு மெத்தவுமிருந்தது. அங்கு நான் போய் பார்க்கும்போது அங்கொரு மனிதன் உட்கார்ந்துக் கொண்டிருந்தான். அவனை நான் நன்றாகப் பார்க்கும்போது அவனுக்குக் கால்களுமில்லை, கைகளுமில்லை, அவன தேம்பித்தேம்பி ரொம்பவு மழுதுக் கொண்டிருந்தான். அவனை நான் பார்த்து நீயேனிப்படி யழுகிறாயென்றுகேட்டேன். அதற்கவன் என்னைப்பார்த்து எனக்கு

மிருந்த பசி, அதனால் சிந்திக்கிடக்கிற பழங்களைப்பொறுக்கித் தின்னலாமென்றால் இரண்டு காலுமில்லை, ஆகையால் என் மனதிலொரு நாட்டமிருக்கிறது. அதென்னவெனில், நான் என்கையினால் அந்தப் பழங்களை அறுத்துத் தின்னவேணுமென்று நிரம்ப ஆசை கொள்ளுகிறேன். அப்படி நான் அறுத்துத் தின்னும்படி தாங்கள் செய்வீர்களாகில் நான் தங்கள்பேரில் துவாச்செய்து வழியுங் காண்பிப்பேனென்று சொன்னான்.

அவன் சொல்லிய சொல்லைக்கேட்டு என்மனமிரங்கி அவன் கிட்டேபோய் அவனை என் தோளின்மேற்றாக்கி வைத்துக்கொண்டேன். பின்பு அவன்பேரில் கிருபையுண்டாய்த் தன் தலைமேல் தானே கல்லைப் போட்டுக்கொள்வதுபோலும், நன்மைச் செய்யத் தீமை விளைந்ததைப்போலு மெனக்கு வந்துநேரிட்டது. அவனைத் தூக்கிக்கொண்டு மூன்று நாழிகை வரைக்கும் சுமந்து பின்பு அவனைப் பார்த்து நீ கீழே யிறங்கென்று சொன்னேன். அவன் கீழே யிறங்கவில்லை, அதனாலெனக்குப் பெரிய வருத்தம் வந்து நேரிட்டது. அதெப்படியெனில் அவனுக்கு இரண்டுகாலும் கோல் காலானபடியினாலே அந்தக் கால்களினாலே என்னுடைய கண்முழிகளிரண்டும் பிதுங்கிப் போகும்படியாகச் சுழட்டிப் பிடித்துக் கொண்டான். என்னுடலின் நரம்புகளெல்லா மிழுத்துக்கொண்டது. அதனாலெனக்கு அதிக வருத்தமாகி கூவென்றழுதேன். அப்பொழுது நான் அவனுக்கு அல்லாவினுடைய பத்துவா யிருப்பேனென்று சொன்னேன். அதற்கவன் உன்னை கடித்துத் தின்று விடுவேனென்று சொன்னான். அதற்கு நான் இஸ்லாமானவனாயிருக்க என்னை நீ கடித்துத் தின்றுவிடுகிறேனென்றாய், இன்னும் நீ சிரிப்பாக என்னைக் கிறிகிறிக்கொண்டிருக்கிறாய், இன்னும்என் பிடரியின் மேலடித்துப் பயமுங் காண்பிக்கிறாய், தண்ணீர் குடித்தும் பசி தீர்ந்தும் என்னை விடுகிறதில்லை. எதுவரைக்கும் உன்னைத் தூக்கிக் கொண்டு திரிவேனென்று சொன்னேன். அதையுங் கேளாமல் என் பேரிலிருந்து கனிகளைப் பறித்துத்தின்று என் முதுகின்பேரில் மலஜலமுஞ் செய்தான். பின்னுமென்னை விரட்டி ஓடும்படிசெய்வான். அப்படி நான் ஓடாவிடில் என் பிடரியைப் பிடித்துக் கடிப்பான், அதனால் நான் இளைப்பாகி ஓடவும் நடக்கவும் முடியாமல் அடபாவி! அல்லாவுக்காக என்னை விட்டுவிடுவென்றுசொன்னேன். அம்மொழிகளைக் கேட்டும் அவன் என்னை விடுகிறதில்லை, நான் அந்த வருத்தததினால் மிகவும் அழுவேன், இன்னும் என் தலைமேல் அனேக கொப்பளங்களாய் விட்டது. அவனை இறங்கென்றாலு மிறங்குகிறதில்லை அவன் சும்மாவுமிருக்கிறதுமில்லை, என் தலையிலுள்ள கொப்பளங்களை கிள்ளிக் கொண்டேயிருப்பான். அது எப்படியிருக்குமெனில், காகம் புண்ணைக் குத்துவதுபோலும், கொறடினால் பிடுங்

கினுல் எவ்வளவு வருத்தமுண்டோ அவ்வளவு வருத்தமாயிருந்தது. இன்னும் என் தலையோடு தன் தலையை வைப்பான். அதனுல் என்னுடைய சரீரமெல்லாம் பஞ்சு பஞ்சாய்ப்போய்விடும், அவனெனக்கொரு சத்துருவாதியாய் விட்டான். பின்னும் நான் நடக்க ஓட முடியாமல் திகைத்து நிற்பேனுகில், அப்பொழுது என் தலைமேல் மேல்மேலாக அடிப்பான், கடிப்பான். அதனுல் நான் அதிக வருத்தமாகி என்ன சொன்னபோதிலும் என் சொல்லைக் கேளான். என்னையும் விடான் இப்படி எனக்கு யிரவும் பகலும் வருத்தத்தைக் கொடுப்பான், (யாஅலியே) நானிப்படிப்பட்ட கொடியவனென்று அறியாமற் போனேன். அவன் கையில்நானகப்பட்டு மிகுந்த இளைத்தவனுகி விட்டேன். என்னுல் ஒன்றுஞ் செய்யமுடியாமல் போய்விட்டது.

நானென்ன சொன்னபோதிலும் அவனுக்கு மனமிளகுகிறதுமில்லை, யிரங்குகிறதுமில்லை. நானவன்பேரில் கிருபை செய்ததற்கு அவன் என்பேரில் இப்படிப்பட்ட துன்பஞ் செய்தான். இப்படி நான் சில நாள்வரைக்கும் தூக்கித்திரிந்தேன், இந்தக் கொடிய முஸீபத்தினுலே அலைந்தலைந்து கடைசியில் மிகுந்த வருத்தமாகிப் பொறுக்கமுடியாமல் என்னிரண்டு கையுமெடுத்து ஹக்தஆலாவினிடத்தில், ஓ நாயனே! எனக்கு மவுத்தைக்கொடு, நானுெடுங்கி யிளைத்துவிட்டேன், அப்படியில்லாவிட்டால் இந்தப் பலா முஸீபத்தை விட்டும் விலக்கிவிடுவென்று துஆக் கேட்டேன். அப்பொழுது அந்தத் தோப்பினுள்ளிருந்து நல்ல வடிவான முகமும், நற்குணமும், நல்ல வாலிபப்பிராயமுள்ள ஒரு மனிதன்வந்து என் பெயரை சொல்லிக் கூப்பிட்டார். நானவரைத் திரும்பிப் பார்த்தேன் அவருடைய அழகையும் குணத்தையு மிப்படியென்றுயெப்படி சொல்வேன். அப்பொழுது அவர், ஓ தமீமுல் அன்சாரியே! உன்னுடைய ஹாலென்னவென்று கேட்டார். அப்பொழுது நான் அதிக துக்கத்தோடு அழுதுகொண்டு என்னுடைய வருத்தங்களை யெல்லாம் சொல்லி முறையிட்டு ஹக்த ஆலாவுக்காக என்னை இந்தப் பலா முஸீபத்தைவிட்டும் விலக்கி வழியையுங் காண்பியுமென்று சொன்னேன். அப்பொழுதவர் என்னுடன் நீரிந்த பலாயின் கையிலென்னமா யகப்பட்டுக்கொண்டீர், ஏன் உட்கார வைத்துக்கொண்டீர், ஏன் கிருபை செய்தீர், இக்கூட்டத்தாரிங்கே மிச்சமிருக்கிறுர்கள். நீ வந்தது அவர்களுக்குத் தெரியாது, அதெப்படித் தெரியுமாகில் உன்பேரில் ஒவ்வொருவராக மாற்றி மாற்றி யேறி உன்னைக் கொன்றுபோடுவார்கள். ஆகையால் நீ இப்பொழுது ஒரு தந்திரஞ் செய்யவேணும். அதெப்படியெனில் ஒரு பள்ளம் தோண்டி அதில் அங்கூர் பழத்தின் செடியொன்றை புதைத்துவிடு. அதிலிருந்து அப்பழத்தைப் பறித்து அவனைத்

தின்னவை. அப்போது அவன் கீழே யிறங்கிப் பழத்தைப் பறித்துத் தின்பான், அவ்வேளையில் நீ ஓடிப்போவென்று சொன்னார். (யாஅலியே) நான் அவர் சொன்னபடியே செய்தேன், அவன் அதின்படி பூரிப்பினால் குதித்து அப்பழத்தைப் பறித்துத் தின்றான். அப்பொழுது தூரமாக ஓடிப்போனேன், ஹக்தஆலா என்னைக் காப்பாற்றி விலக்கிவிட்டான், நான் முன்னோடி அந்த வாலிபக் காரரின் கிட்டேபோய் அதிக மரியாதையுடன் சலாஞ் செய்தேன். அப்பொழுதவர் என் முகத்தைப் பார்த்து நீ துக்கத்தையெல்லாம் நீக்கிவிடு உன் பட்டணமும் வீடுங் கிட்டே ஆகிவிட்டது. நீ ரொம்பவும் சந்தோஷப்படுவென்றார் அதற்கு நான் எப்படிச் சந்தோஷப் படுவேன். இன்னும், துக்க மென்னைவிட்டு நீங்கவில்லை. போகிற வழியுந் தெரியவில்லையென்று சொன்னேன். அப்பொழுது அந்த வாலிபக்காரர் என்னை மேற்குப் புறமாகப் போவென்று சொன்னார்.

---

## 12-வது கிஸ்ஸா.

அவ்விடம்விட்டு நீங்கினதும், வழியிலோரு தோப்பைக் கண்டதும் அங்கோருவரைக்கண்டு பேசியதுமான விபரம்.

இக்கிஸ்ஸாச் சொல்வதைக்கொண்டு அலுப்பாகி வாயை மூடாதே, கொஞ்சங் கஷ்டமெடுத்து முழுதுஞ் சொல்லிவிடு, கேட்டவர்களும் சொல்லவில்லையென்கிற நாட்டத்தை வைக்காதே, மறைக்காமல் சொல், (யாஅலியே) அந்த வாலிபக்காரருடைய சொல்லின்படி அந்த பலாயைவிட்டு நீங்கி மேற்குப் புறமாக முன்னேக்கி மூன்று நாள் வரைக்கும் நடந்தேன். அங்கோர் தோப்பொன்று எதிர்ப்பட்டது. அந்தத் தோப்பினுள் குளமொன்றிருந்தது. விதவிதமாகிய பூக்களும், காய்களும் பழங்களும் பழுத்திருந்தது. அந்தப் தோப்பினுடைய அலங்காரத்தைச் சொல்ல என்றால் முடியாது. அங்கே நான் போய் பார்க்கும்போது ஹூறுல் ஈன்களைப்போல மெத்த அழகான பரிக்குலத்தின் பெண்களிருந்தார்கள். அவ்விடத்தில் அல்லாஹுத் தஆலாவினுடைய ஒளிவின் மழையே பெய்துக்கொண்டிருந்தது. அப்பொழுது நான் அத் தோப்பினுள் புகுந்தேன். அங்கு ஒரு பெரிய அதிசயத்தைக் கண்டேன். அதென்னவெனில் ஒரு வாலிபப் பெண் முத்து நவரத்தினம் மரகதம் முதலிய இரத்தினங்களாற் செய்த நகைகளுமிட்டுக் கொண்டு வர்ணவர்ணமாகிய அழகினையுடைய ஆடையுமுடுத்திக்கொண்டு அத்தர் முதலிய நானாவித மணவகைபூசிக் கொண்டு கிலுகிலுவென்று சிரித்துக்கொண்டு நின்றாள். அப் பெண்ணைக்கண்டு நான் சலாஞ்செய்தேன். அதற்கு அவள் பிரதி சொல்லாமல் என்னைப்போவென்று சைகை செய்தாள். அப்

பொழுது நான் உன் பெயரென்ன, உன்குலத்தின் பெயரென்ன? நீ சிரிக்கிற விதமென்ன, எனக்குத்தெரியச்சொல்லென்று கேட்டேன். அப்பொழுது இருந்தாப்போலிருந்து ஓ மனிதனே! நீ சீக்கிரமாய் இவ்விடம்விட்டுப் போகாமல் நின்றால் வெந்துச் சாம்பலாய்ப் போவாயென்று சத்தம் வந்தது. அந்தச் சத்தத்தைக் கேட்டமாத்திரத்தில் எனக்கு ஒன்றுந் தெரியாமல் பயத்தினால் மூர்ச்சையாய் விழுந்துவிட்டேன். அப்படிச் சிலநாள் வரைக்கும் விழுந்துகிடந்து அதன் பின்பு எனக்கு உணர்ச்சிவந்து எழுந்து முன்னோக்கி நடந்தேன். அங்கோரிடத்தில் தோப்பு ஒன்று யெதிர்ப்பட்டது. அங்குபாலினால் நிறப்பிய குளமொன்றிருந்தது. அதிலிருந்து பாலும் வெளியே வோடிக்கொண்டிருந்தது. அங்கே முன்னால் கண்டேனே அந்த வாலிபரை பின்னுமங்கே கண்டேன். அவர்யாரெனில், காலில்லா மனிதரிடத்தில் சிக்கிக் கொண்டபோது என்னைமீட்டினரே அவராயிருந்தார்.

---

## 13-வது கிஸ்ஸா.

நான் (யா அலியே) கண்டதெல்லாம் அதிசயமும், புதுமையுமுள்ளதாயிருக்கும். இப்படி ஒரு மனிதனுங் கண்டறியான். அப்பொழுது விதிலுள்ளதெல்லாம் பதியில்வந்து முடியுமென்று தனக்குள்தானே சொல்லி அதைவிலக ஒருவராலு முடியாதென்று சொல்லிக்கொண்டேன். பின்பு (யா அலியே) நான் அந்த வாலிபக்காரைப்பார்த்து நீங்கள் இன்னாரென்றும் உம்பெயரும் நீங்கள் இப்பொது என்பேரில் இப்படிப்பட்ட கிருபைச்செய்கிறீரே உம்மை அனுப்பிவைத்தவ ரின்னாரென்றும் கிலுகிலுவென்று சிரித்து நின்றகிழவி யின்னாளென்றும் இன்னும் நான் பயப்படும்படியாக வந்தசத்த மின்னதென்றும் இவ்விதங்களை எனக்கு நன்றாய்த் தெரியும்படியாகத் தாங்கள் சொல்லவேணும். இன்னும் நான்பட்டபாடுகளையெல்லாம் கண்ணினாலும் கண்டுமிருக்கிறீர். இன்னும் நான் கணக்கற்ற அநேக தூரமளவு யாத்திரைசெய்தேன், அங்கேயும் இப்படிப்பட்ட ஒளிவான சூறத்தைநான் காணவில்லை. இப்படி நான் சந்தோஷமும்படவில்லை. ஆகையால் எனக்கு இவைகளெல்லாம் சொல்லவேணுமென்று கேட்டேன். அப்பொழுது (யா அலியே) அந்த வாலிபக்காரர் என்னைப்பார்த்து நான் சொல்வதைக் காது கொடுத்து இன்பித்துக்கேளும், முன்பில் அந்த வலியுல்லாவைக் கண்டீரே அவர் உன்னுடன் பிறந்தவர். அவர் இல்யாசு அலைகிஸ்ஸலாம், சிரித்துக்கொண்டு நின்ற கிழவி துனியாவாகவிருக்கும், நீ பயப்படும்படியாகப் பிறந்த சத்தமானது யாஜூசு மாஜூசுக் கூட்டத்தாராயிருக்கும். நான் கிழுறுநபியா யிருக்கிறேன் என்ற சொன்னார். அந்தச் சொல்லை நான் கேட்டவுடனே ஓடிப்போய் அவரைக்

கையைப்பிடித்து முத்தியிட்டேன். பின்பவரைப்பார்த்து நான் இந்தப் பூமியில் அதிக வருத்தங்களைத் தலைமேற் தூக்கிக்கொண்டேன், தங்களுடைய மூபாறக்காகிய பாதத்தைக் கண்டதால் எனக்கு மெத்தச் சந்தோஷமாயிற்றென்று சொன்னேன்.

அப்பொழுது (யா அலியே) கிலுறு அலைஹிஸ்ஸலாம் என்னைப் பார்த்து நீ வெகு நாளாக அதிக வருத்தங்களையுமெடுத்தாய் மிகுந்த துயரங்களும்பட்டாய், ஆகையாலிப்பொழுது என்பேரில் கடனுய் விட்டது, உன்னை உன் வீட்டில் கொண்டுசேர்த்து நீ உன்பெண்ஜாதி பிள்ளைகளோடு கூடிச் சந்தோஷிக்கச் செய்வேனென்று சொன்னுர். அந்தச் சொல்லைக் கேட்டவுடனே எனக்கு என்னிலும் அடங்காத சந்தோஷம் பொங்கிற்று. பின்னும் நான் கிலுறு அலைஹிஸ்ஸலாத்தைப்பார்த்து இந்த அடியேனுடைய வீடு இங்கிருந்து எவ்வளவு தூரமிருக்குமென்று கேட்டேன். அதற்கு கிலுறுநபி இங்கிருந்து மதீனநகர் 100-வருஷத்தின் பயணத்திற்கும் அதிகமிருக்குமென்று சொன்னுர். அச்சொல்லைக்கேட்டு நான் நிரம்பவும் விசனமுள்ளவனுய் எனக்கு அங்கேபோக அவ்வளவுவயது இருக்குமாவென்று சொன்னேன், அதற்குக் கிலுறு அலைஹிஸ்ஸலாம் நீயேன் விசனப்படுகிறுய், நீ ஹக்தஆலாவின் குதறத்தை நினைத்து திடச்சித்தஞ்செய், இப்பொழுது நீ எத்தனையோவருடத் தலைதூரங்களைத் தலைத்துவந்தாய். இன்னும் 100-வருஷத்தின் வழிப்பயணத்தை நடக்கமாட்டாயா, ஹக்தஆலாவினுடைய கிருபையைக்கொண்டு நாளையதினம் உன்வீடுபோய்ச் சேருவாய், ஆனல் நீ சில நாள் வரைக்கும் மிங்கேயிரு, நாங்கள் உன்னுடைய கிசுமத்து செய்வோமென்று சொன்னுர். அப்படி நான்சிலநாளங்கிருந்தேன். (யா அலியே) கிலுறு அலைகிஸ்ஸலாம் எனக்கு மரியாதைநிரம்பவும் செய்துவந்தார். அப்படி நடந்துவருகிறநாளையில் ஒருநாள் இருண்ட மேகக்கூட்டங்கள்வந்து இறங்கினது. அதிலிருந்து இடியுமின்னலுமாகப் பூமியதிரும்படியாக பளீர் பளீரென்று மின்னலும் கடகடவென்று இடியின் சத்தமும் முழங்கின. இன்னும் அம்மேகத்துள்ளிருந்து ஒரு கருமேகக்கூட்டங் கிலுறு அலைஹிஸ்ஸலாமிடத்திற்கு வந்து கிலுறு நபிக்குச் சலாஞ்சொல்லி முன்னின்றது. அப்பொழுது கிலுறு நபி அக்கருமேகத்தைப் பார்த்து நீ யெங்கேபோய் மழை பொழிவாயென்று கேட்டார். அதற்குஅம்மேகம் ஓ நபியே! நான் மதீனமாநகரினுள் போய்ஹக்தஆலாவி னுத்திரவின்படி மழை பொழிவேனென்று சொல்லினது. அந்தச்சொல்லை கிலுறு அலைஹிஸ்ஸலாங்கேட்டு, ஓ மேகமே! இங்கு என்னிடத்தில் மதீனத்தாரொருவரிருக்கிறுர், அவரை அப்பட்டணத்திலுள் கொண்டுபோய் அவருடைய வீட்டில் விட்டுப்பின்பு நீ அவர் தலைமேல் மழை பொழிய வேணுமென்று கட்டளையிட்டார்.

அப்பொழுது அம்மேகமானது ஓ நபியே! அப்படியே தங்கள் சொற்படி அம்மனிதனை அங்குக் கொண்டுபோய் விடுகிறேனென்று சொல்லி நீளமாக நீண்டு என்னைத் தூக்கித் தன்பேரில் வைத்துக் கொண்டு, ஒரு நொடிக்குள்ளாக ஓடிவந்து மதீனமாநகரம் சேர்ந்து என்னை என்வீட்டினிற்கொண்டுவந்து இறக்கிவிட்டுப்பின்பு என் தலைமேல் மழைபொழிந்ததென்று நடந்த காரியமெல்லா மொன் றுந்தவறாமல் அந்தச்சபை முன்னாக அலிறலியல்லாஹு அன்ஹுவுக்குச் சொல்லினார். யெல்லாருங்கேட்டு அதிக சந்தோஷங் கொண்டுஉடனே நாவிதனை யழைப்பித்துச் சடைவளர்த் துக் கொண்டிருந்ததலைமயிர் முதலியவைகளையெல்லாங் களைந்து தலைச் சவரம் முகவேலையுஞ் செய்வித்தார். அப்பொழுது தமீமுல்அன் சாரி றலியல்லாஹு அன்ஹுவை சகலபேர்களும் பார்த்து அவருடைய அடையாளங்களைக் கண்டுபிடித்து அவர் தமீமுல்அன்சாரி யென்று அறிந்துக்கொண்டார்கள். ஹஜறத்து உமறு றலியல்லாஹு அன்ஹுவும்அதை அறிந்துக்கொண்டார்கள். பின்பு தமீமுல் அன்சாரி றலியல்லாஹு அன்ஹுவினுடைய பெண்சாதியை அவரிடம்ஒப்பித்து விட்டுநிக்காகுசெய்துக்கொண்டவரை விலக்கி விட்டுதமீமுல்அன்சாரி சொன்னவைகளெல்லாங் கேட்டு எல்லாரும் ஆச்சரியப்பட்டு மெத்தச் சந்தோஷத்தோடு அவரவர் வீடுகளுக்கு அவரவர்போய் சேர்ந்தார்கள். தமீமுல்அன்சாரியும் தன் பெண் சாதியை அழைத்துக்கொண்டு தானும் தன்வீடுபோய்ச்சேர்ந்து இருவரும் பூமணம்போல கூடிக்கலந்து யோகசமுத்திரத்தில் மூழ்கி மகிழ்ச்சியோடு சந்தோஷம் பெற்று வாழ்ந்துக்கொண்டிருந்தார்கள்.

ஆமீன் ஆமீன் யாறப்பில் ஆலமீன்.

தமீமுல் அன்சாரி அவர்களின் கிஸ்ஸா

முற்றிற்று.

---

Printed at Shahul Hameedia Press, Madras.

எங்களது சொந்த பிரசுரங்களுள் சில :—

| | | | |
|---|---|---|---|
| நஸ்ஹதுல் ஹதீது வபத்ஹுல் மஜீது ரூ. | 6 | 4 | 0 |
| நபி நாயகத்தின் ஜீவிய சரித்திரம் ... | 6 | 4 | 0 |
| சீறுபுராணம் பாட்டு ... ... | 3 | 12 | 0 |
| சீறுபுராணம் மூலமும் உரையும் முதற்பாகம் | 5 | 0 | 0 |
| மஜ்மூஅ முஃஜிஸாதே றஸூல் ... | 1 | 14 | 0 |
| சீரத்துல் பாறூக் ... ... | 2 | 8 | 0 |
| பத்ஹுல் மிஸர் ... ... | 2 | 3 | 0 |
| பைத்துல் முகத்திஸின் யுத்த சரித்திரம் | 2 | 8 | 0 |
| தரீக்குல் ஜன்னா ... ... | 3 | 0 | 0 |
| தன்பீஹுஸ்ஸாலிகீன் ... ... | 1 | 8 | 0 |
| பத்ஹுற் றஹ்மான் பில்பிக்ஹின் னுஃமான் | 2 | 0 | 0 |
| மஜ்மூஅ சூறத்துல் குர்ஆன் (முக்கியமான 40 சூராக்கள் தமிழிலும் அரபியிலும்) | 2 | 8 | 0 |
| மிஃறாஜுல் ஆரிபீன் பீ தர்ஜுமதி மின்ஹாஜில் ஆபிதீன் ... | 2 | 8 | 0 |
| மிப்தாஹுஸ்ஸலாஹ் பீ யீலாஹின்னிகாஹ் | 3 | 0 | 0 |
| மிப்தாஹுஸ் ஸுபுஹானி பீ தர்ஜுமத்தி மஜ்மூஉஸ் ஸுல்தானி ... | 1 | 14 | 0 |
| ழுருருல் முஃமினீன் 1 முதல் 4-வது பாகம் | 4 | 6 | 0 |
| ஷை 5-வது பாகம் முதல் 8-வது பாகம் | 4 | 6 | 0 |
| ஷை 9-வது பாகம் முதல் 12-வது பாகம் | 4 | 6 | 0 |
| ஷை 1 முதல் 12 பாகம் வரை ... | 11 | 4 | 0 |
| கதீஜா நாயகி அவர்களின் ஜீவிய சரித்திரம் | 1 | 4 | 0 |
| பாத்திமா நாயகி அவர்களின் ஜீவிய சரித்திரம் | 1 | 4 | 0 |
| ஆயிஷா நாயகி அவர்களின் ஜீவிய சரித்திரம் | 1 | 9 | 0 |
| ஷை 3 நாயகிகளின் சரித்திரங்கள் சேர்த்து | 3 | 12 | 0 |

---

கிடைக்குமிடம் :—

ஹாஜீ M. A. ஷாஹுல் ஹமீது & ஸன்ஸ்,

நெ. 20. ஹைரோட், திருவல்லிக்கேணி, மதறாஸ்.